# கல்கி

ஜனவரி 1 — 1956

## பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.



மலர் 15
இதழ் 22

தமிழ்த்திரு நாடு தன்னைப் - பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

மன்மத ஸு
மார்கழி மீ 17

# சங்கீதத் திருவிழா

மங்களகரமான மன்மத வருஷத்தின் சங்கீதத் திருவிழா சென்னையில் கோலாகலமாக ஆரம்பமாகிற்று.

இந்த விழா நிகழ்ச்சிகளைத் தொடங்கி வைத்த பெரியார்களும், தலைமை உரை நிகழ்த்திய வித்துவான்களும் சங்கீதம் வளர்ந்தோங்கி நிலைபெற்று நிற்கவும், தென்னாட்டின் புராதனமான இசைக் கலை திருத்தமான முறையில் விருத்தியடையவும் பல அரிய யோசனைகளைக் கூறியிருக்கிறார்கள்.

கலாக்ஷேத்திர நடன நாட்டிய நிகழ்ச்சிகளைத் தொடங்கி வைத்த நமது தலைவர் ராஜாஜி சங்கீதம் தோன்றிய முறையை விளக்கி, நடனக் கலையை எப்படிப் பரிசுத்தமான முறையிலே பாதுகாத்து வளர்க்க வேண்டும் என்று, சந்தேகத்துக்கு இடமின்றித் தெளிவாக எடுத்துக் கூறியிருக்கிறார். பக்தியிலிருந்து முளைத்த சங்கீதம் பக்தியினால் வளர்ந்து, பக்தியிலே கொடி வீசிப் படர்ந்து பக்தி மணத்தோடு கமழ வேண்டும் என்ற உண்மையை அவர் விளக்கி யிருக்கிறார்.

நம்முடைய கலைகளுக்கு உன்னதமான எதிர் காலம் உண்டு. ஆனால் அவற்றை வளர்க்கும்போது ஒரு விஷயத்தை நன்றாக நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். இசையையும் நடனத்தையும் பக்தியிலிருந்து பிரித்துத் தனியாக நடத்துவது தவறு. சமயத்தோடு சம்பந்தம் இல்லாத கலையை வீடுகளிலே தனிப்பட்ட குடும்ப சுகத்துக்காக வைத்துக் கொள்ளலாம். ஆனால் பொது மேடைகளுக்கு வந்து விட்டால், இசையும் நடனமும் கடவுளோடு தொடர்பு கொண்டு இயங்க வேண்டும். இல்லையென்றால் மாசின்றிப் பரிசுத்தமான முறையில் புலனுணர்ச்சிகளைக் காப்பாற்றி இதயத்தைப் பண்படுத்தாது. உடல் வனப்பை எடுத்துக் காட்டும் நடனக் கலையில் இதை மிக முக்கியமாகக் கவனிக்க வேண்டும்.

மேற்கண்ட விஷயத்தை ராஜாஜி வற்புறுத்திக் கூறியிருக்கிறார்.

தமிழ் இசை மகாநாட்டைத் தொடங்கி வைத்த நமது ராஜ்யக் கல்வி மந்திரி சுப்ரமணியம் அவர்கள் 'பாடுகிறவர், கேட்கிறவர் இருவருக்குமே பக்தி யிருந்தால் தான் இசை யின்பத்தைப் பூரணமாக மாசின்றி அநுபவிக்க முடியும்' என்பதை மிக நன்றாகச் சொல்லியிருக்கிறார். குன்றக்குடி அடிகளாரும் தமது தலைமைப் பேருரையில் பழந் தமிழ் நாட்டின் இசைப் பேரின்பத்தை எடுத்து விளக்கி இறைவனையே நாத வடிவாகவும், இசை மயமாகவும் தமிழர்கள் கண்டு வழிபட்ட முறையை ஒரே பக்தி பரவசத்தோடு சொல்லிச் சொல்லி ஆனந்தித்திருக்கிறார்.

சங்கீத வித்வத் சபை மகாநாட்டில் பேசிய பாரத நிதி மந்திரி தேஷ்முக் அவர்கள் ஐக்யத்திற்கும், மனிதப் பண்பாட்டுக்கும் சங்கீதம் எப்படி மகத்தான சாதனமாக இயங்குகிறது என்பதைக் கூறி நமது பள்ளிக் கூடங்களின் பாடத் திட்டத்திலேயே சங்கீதம் முக்கியமான இடம் பெறவேண்டும் என்று குறிப்பிட்டிருக்கிறார். பாரத அரசாங்கம் பாரத மக்களின் பண்பாட்டை வளர்க்கக்கூடிய கலை முயற்சிகளுக்கெல்லாம் ஊக்கமாக உதவி செய்யக் காத்திருக்கிறது என்பதையும் நிதி மந்திரி தேஷ்முக் குறிப்பிட்டு மகிழ்ந்தார்.

இந்தியன் பைன் ஆர்ட்ஸ்[1] சொஸைட்டி விழாவின் தலைவர் தண்டபாணி தேசிகர் அவர்களும், சங்கீத வித்வத் சபைத் தலைவர் மருங்காபுரி கோபால கிருஷ்ணையர் அவர்களும், இப்பொழுது வழங்கி வரும் சங்கீதத்தின் தரத்தை உயர்த்துவதற்கான பல வழிகளை எடுத்துச் சொல்லி நமது பண்டைப் பெருமையை யெல்லாம் விளக்கி யிருக்கிறார்கள். ஸ்ரீமதி மிருணாளினி சாராபாய் அவர்கள் தமது சொற்பொழி

யில், முன்னேறுவதாக நினைத்துக் கொண்டு கலையின் தரத்தைக் குறைத்து விடக் கூடாது என்றும் கலையைக் கடவுளாகக் கும்பிட வேண்டும் என்றும் அது ஒன்றே கலையைப் பரப்புவதற்கு வழி என்றும் சொல்லியிருக்கிறார்.

* * *

மேற்கண்ட பேச்சுக்கள் அனைத்தையும் ஆராய்ந்து பார்க்கும் போது இரண்டு விஷயங்களை எல்லாரும் வற்புறுத்திக் கூறியிருப்பது தெளிவாகத்தெரிகிறது. ஒன்று, நமது சங்கீதத்தின் பழைமையையும் தரத்தையும் மாசு படுத்தாத வகையில் பேணிப் பாதுகாத்து வளர்க்க வேண்டும். இரண்டு, கலையைப் பக்தியிலிருந்து தனியாகப் பிரித்து விடக் கூடாது.

இந்த இரண்டும் ஒன்றுக்கொன்று சம்பந்தப் பட்ட விஷயங்கள். கலையின் தரம் உயர வேண்டும் என்பது உண்மை. இதற்கு ஒரு வழி, ஒரே வழி, பக்தியோடு அதை இணைத்து வளர்க்க வேண்டும் என்பதே.

எங்கும் பக்தி என்ற பேச்சே காதில் விழுவது ஒரு நல்ல சகுனம். நமது நாட்டின் கலைகளுக்கெல்லாம் அடிப்படையாக, ஆதார வேகமாக அமைந்தது பக்திதான். இதை மனத்தில் கொண்டு, சங்கீத சாஸ்திரத்தை நன்கு கற்ற அறிஞர்கள் எல்லாம் பக்தி என்ற பண்பை வளர்த்துக் கொண்டால், நல்ல சாகித்தியங்களும், நல்ல சங்கீதமும், நல்ல ரஸிகப் பெரு மக்களும் விருத்தியடைய இடமுண்டு. ஆண்டுக்கு ஒரு முறை கூடுகிற இந்த மகாநாடுகளில் மட்டும் இதை ஞாபகப்படுத்திக் கொள்வதோடு நிறுத்தி விடாமல், மகாநாட்டில் பெரியார்கள் சொன்ன யோசனைகளை யெல்லாம் செயல் முறையிலே கொண்டு வருவதற்கான காரியங்களை இந்த சங்கீத ஸ்தாபனங்கள் தொடர்ந்து செய்ய வேண்டும்.

சுதந்திரம் பெறும் வரை, அன்னியர்களிடமிருந்து விடுதலை பெறுவது ஒன்றே நமது அரசியலாக இருந்து வந்தது. இனி சுதந்திரம் பெற்ற பிறகு அரசியல் என்றால் மக்களின் வாழ்க்கைத் தரத்தோடு கல்வியும், மொழிகளும் கலையும் பண்பாடும் வளர்வதற்கான காரியங்களைச் செய்வதே. இந்த வகையில் கலைச் சங்கங்கள் எல்லாம் பயனுள்ள சேவை செய்யும் தேசிய ஸ்தாபனங்களே ஆகும். இம்மாதிரி விழாக்கள் எல்லாம் அந்த தேச சேவைக்கு அத்தியாவசியமான பயனுள்ள தேசிய மகாநாடுகளே என்று சொல்லவேண்டும். இந்த மகாநாடுகளின் விளைவாக நமது தேசத்தின் கலை அறிவு செழித்தோங்குமானால் அதுவே சுதந்திர பாரதத்தின் பண்பாடு தழைப்பதற்கு வழியாகும். தேசபக்தி என்றும், கலை பக்தி என்றும், கடவுட் பக்தி என்றும் தனித் தனியாக இல்லை. தண்டும், கிளைகளும், இலையும் தழைகளும் எல்லாம் பக்தி என்ற ஒரு மூல வித்திலிருந்து உண்டானவை தான். வித்தின் தன்மை எப்படி மரம் முழுதுமே வியாபித்திருக்கிறதோ அப்படியே பாரதப் பண்பு முழுதுமே பக்தி மணம் கமழும் படியாகக் கலைகளை வளர்ப்பதே நமது கடமை.

# ஐம்பெரும் வட்டம்

இந்தியாவை ஐம்பெரு வட்டங்களாகப் பிரித்து வட்டத்திற்கு ஒரு ஸ்தாபனமாக அமைத்து அந்த அந்த வட்டத்திற்குள் அடங்கிய ராஜ்யங்கள் எல்லாம் அந்த வட்டத்து ஸ்தாபனத்துக்குள் அடங்கி, எல்லா நிருவாகமும் நடைபெறுவதற்கு வழி காண வேண்டும் என்று நேருஜி யோசனை சொல்லி, அந்த யோசனையை எல்லாரும் ஒப்புக் கொண்டு பரிசீலித்து வருவதாகவும் செய்தி வந்திருக்கிறது.

நேருஜி போட்ட விதை நல்ல விதையான படியினால் பயிர் விளையாமல் போகாது.

வட்ட ஸ்தாபனம் முதலில் உபதேச ஸ்தாபனமாகத்தான் இருக்கும் என்று நேருஜி தைரியம் சொன்னார். பெரிய இடத்திலிருந்து "உபதேசம்" வந்தால் அதன் வேகம் கட்டளைகளுக்குக் குறைந்ததாக இராது. மெனக்கெட்டு வட்டங்கள் ஏற்படுத்தி அவற்றுக்கு ஸ்தாபனங்களும் அமைத்தபின், அவை அதிகாரமற்ற அவி ஸ்தாபனங்களாக இருக்க முடியாது. பள்ளத்தாக்கில் கரைகட்டி விட்டால் ஏரியில் நீர் நிறைவது இயற்கை நியதி.

எந்த முறையிலாவது இந்தியாவைப் பெரும் பிரிவுகளாகப் பிரித்து அமைத்துக் கொண்டு நிருவாகம் நடத்தினால் ஒழிய, பல சிக்கல்கள் உண்டாகி மக்களின் நன்மைக்கு வேண்டிய காரியங்கள் சரிவர நடைபெறாமல் போகும். இதைக் கண்டுகொண்டு நேருஜி இந்த யோசனையைச் சொன்னதாகத் தெரிகிறது. இது நாட்டின் நலத்துக்கு ஒரு முக்கியமான யோசனை. குறுகிய மனப்பான்மைகள் ஒழிந்து விசால நோக்கங்கள் தோன்ற வேண்டுமானால் எந்த வழியிலாவது தெற்கே முன்போன்ற ஒரு பேரிராஜ்யம் ஏற்பட வேண்டும். வட வட்டம், கீழ் வட்டம், மேல் வட்டம், நடு வட்டம், இவற்றைவிடத் தென் வட்டம் மிக அவசியம். இதை நம்மவர்கள் உணர்ந்து நடந்து கொள்ள வேண்டும்.

# இலங்கைக் காங்கிரஸின் கடமை

இலங்கையில் வாழும் சுமார் பத்து லட்சம் இந்தியர்களின் எதிர்கால நல் வாழ்வு இந்தியக் குடியரசு சர்க்காரின் கையில் இல்லை; சென்னை ராஜ்ய சர்க்காரின் கையில் இல்லை. இலங்கை இந்தியர்களின் கையில், குறிப்பாக இலங்கை இந்தியத் தலைவர்களின் கையில்தான் இருக்கிறது. இலங்கை இந்தியர்களுக்கு ஏற்பட்டுள்ள இந்தச் சோதனையையும் நெருக்கடியையும் வெற்றிகரமாகச் சமாளிக்க வேண்டுமாயின் இலங்கை ஜனநாயக காங்கிரஸ் தலைவர்கள் சமயோசிதமாகவும் உறுதியுடனும் ஒற்றுமையுடனும் நேர்மையுடனும் நடந்து

# ராஜாஜியின் பாராட்டு

நஷ்டத்துக்கு சம எதிர் எடையைப் போல், புயலின் அளவோடும் வேகத்தோடும் ஒரு மகிழ்ச்சி தரும் சம்பவம் நடந்திருக்கிறது. பக்கிங்ஹாம் தொழிலாளிகள், ஏழைகள், ஐம்பதினாயிரம் ரூபாய் தங்கள் கூலிப் பணத்திலிருந்து எடுத்து, நட்டில் வைத்து அன்பளிப்பாகத் தந்தார்கள் இந்த வாரம். இதைப்போன்ற சிறப்பும் அழகும் கொண்ட ஒரு நிகழ்ச்சி நான் பார்த்ததில்லை. ஏழைகள் — ஏன் — தமிழர்கள் எல்லாருமே பெருமை கொள்ளலாம். மேகத்தில் நின்ற சின்னஞ்சிறு தண்ணீர்த் துளிகள் ஒன்றாக இறங்கிப் பெரிய மழையானதைப் போலவே சென்னைத் தொழிலாளர்களின் ஒரு நாட்கூலி ஐம்பதினாயிரம் ரூபாய் ஆயிற்று. ஏகமனதாக எந்தக் காரியம் எடுத்தாலும் அன்பும் முயற்சியும் கலந்து பயன் தரும் பெருவெள்ளமாகும்.

ஏழைகளுக்கு ஏழைகள் உதவும் முறையை பக்கிங்ஹாம் தொழிலாளிகள் காட்டி நிறைவேற்றியது, சரித்திரத்தில் பதிந்து நிற்கும். புது ஆண்டுக்கு இந்த நன்னிகழ்ச்சி சுப ஆரம்பமாகும்.

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரி

கொள்வது அவசியம் என்பதைச் சொல்ல வேண்டியதில்லை. தலைவர்களிடையே ஒற்றுமையும் உறுதியும் இல்லாவிடில், இலங்கையில் உள்ள லட்சக் கணக்கான ஏழை இந்தியத் தொழிலாளர்களின் கதி என்ன ஆவது! பல ஆண்டுகளாகப் பிரஜா உரிமைக்காகவும் பாஷை உரிமைக்காகவும் போராடி வரும் அவர்களுக்குத் தலைமை தாங்கி அவர்களை வெற்றிப் பாதையில் நடத்துவது யார்!

சில நாட்களாக இலங்கையிலிருந்து வந்து கொண்டிருக்கும் செய்திகள், இலங்கை வாழ் இந்தியர்களின் க்ஷேமத்தில் அக்கறை கொண்ட சகலருக்கும் வருத்தத்தையும் ஏமாற்றத்தையும் கொடுப்பதாக இருக்கின்றன. இலங்கை இந்தியர்களின் பிரதிநிதி ஸ்தாபனமான இலங்கை ஜனநாயக காங்கிரஸில் பிளவு ஏற்பட்டு அது இரண்டு தனி முகாம்களாகப் பிரிந்து கிடக்கின்றது. இதன் சம்பந்தமான முழு விவரங்களையும் சென்ற வார "கல்கி" இதழில் வெளியாகியுள்ள நமது இலங்கைக் கடிதத்திலிருந்து தெரிந்துகொண்டிருக்கலாம். அவ்வாறு காங்கிரஸ் பிளவுபட்டிருப்பதால், காங்கிரஸ் சார்பில் பேச யாருக்கு உரிமை உண்டு என்பதை அரசாங்கத் தொழிலாகவும் தோட்ட முதலாளிகளும் நிர்ணயிக்க முடியவில்லை. எனவே, தோட்டத் தகராறுகள் சம்பந்தமான பல சமரச மகாநாடுகளை ஒத்திவைக்கும்படி நேர்ந்திருக்கிறது.

இந்த நிலைமைக்கு யார் யார் காரண புருஷர்கள் என்பதை ஆராய முற்படுவதால், எவ்வித பலனும் ஏற்படுவதற்கில்லை. நிலைமை மேலும் முற்றி, இலங்கை ஜனநாயக காங்கிரஸ் உருக்குலைந்து போய் விடாமல் பாதுகாக்க வேண்டியது இலங்கை இந்தியத் தலைவர்களின் மகத்தான கடமையாகும். இலங்கையில் இந்தியர்களின் சார்பில் போராடுவதற்கு வேண்டிய பலம் பொருந்திய ஸ்தாபனமாக இலங்கை ஜனநாயக காங்கிரஸ் இருந்து வருவதால்தான், இந்தியர்களின் கோரிக்கைகளை இலங்கை சர்க்கார் முற்றிலும் புறக்கணிக்க முடியவில்லை. அப்படிப்பட்ட ஸ்தாபனம் பலவீனமடைந்து விடக்கூடாது. இலங்கை இந்தியத் தலைவர்கள், தங்களிடையே ஏற்பட்டுள்ள கருத்து வேற்றுமையையும் மாற்சரியத்தையும் மறந்து, ஜனநாயக காங்கிரசுக்குக் குந்தகம் ஏற்படாமல் நடந்து கொள்வார்கள் என்று நம்புகிறோம். இல்லாவிடில், இலங்கை இந்தியர் பிரச்னை சம்பந்தப்பட்ட வரையில், வெண்ணெய் திரண்டு வரும் தறுவாயில் தாழி உடைந்த கதையாகி விடுமோ என்று அஞ்சுகிறோம்.

அட்டைப்பட விளக்கம்

## வீணாதரர்

சென்னை இசை விழாவை யொட்டி வெளியாகும் இந்த இதழின் அட்டையிலே வீணாதர தக்ஷிணாமூர்த்தி வீணையேந்திய கரத்தோடு காட்சி தருகிறார்.

தஞ்சைப் பெரிய கோயிலில் இருந்த வீணாதரரின் சிலை, இப்பொழுது தஞ்சைக் கலைக் கூடத்தில் வைக்கப்பட்டிருக்கிறது. வில்லேந்திய திரிபுராந்தகருக்கும், வீணையேந்திய தக்ஷிணாமூர்த்திக்கும் உள்ள வேறுபாட்டை, இடது கையின் அமைப்பிலே காணலாம். இசைக்குத் தந்தையாகவும், இசை வளர்க்கும் கலைஞராகவும், கலைகளின் காவலராகவும் விளங்குகிற தக்ஷிணாமூர்த்தியை, புதிய ஆண்டின் முதலாவது இதழ் அட்டையிலே இளம் பிறையும் கோபுரமும் சேர்ந்த பின்னணியோடு மூவர்ணத்திலே சித்திரித்திருக்கிறார் நமது ஓவியர் மணியம்.

# என்ன சேதி?

## இந்திய சர்க்கார் பிரதிநிதிகள்

கடல் கடந்து வாழும் இந்திய சகோதர சகோதரிகள், தமிழ் நாட்டில் ஏற்பட்ட புயலினாலும் வெள்ளக் கொடுமையினாலும் மக்கள் பரிதவிப்பதைக் கேட்டு மனம் துடித்துப் பதினாயிரக் கணக்கில் பண உதவி புரிய முற்பட்டிருக்கிறார்கள். மலாய் நாட்டிலிருந்து முதல் தவணையாக ஐம்பதாயிரம் ரூபாய்க்கு மேல் வந்திருக்கிறது. அதிகாரிகளின் எந்தவிதமான முயற்சியுமின்றி ஜனங்கள் தாங்களாகவே வலுவில் உதவி புரிந்து வருகிறார்கள்.

இவ்விஷயமாகக் கோலாலம்பூரில் நடந்த மாபெரும் கூட்டம் ஒன்றில் பேசிய பிரமுகர்கள், சிங்கப்பூரிலும் கோலாலம்பூரிலும் இருக்கும் இந்திய சர்க்கார் பிரதிநிதிகள் வெள்ளக் கொடுமை பற்றிய செய்திகளை இந்திய மக்களுக்கு எடுத்துக் கூறத் தவறியதுடன், உதவி கோரி யாதொரு முயற்சியும் எடுத்துக் கொள்ளவில்லை என்று கண்டித்திருக்கிறார்கள். மலாயாவில் உள்ள பிரபல இந்தியத் தலைவர்கள் அவ்விதம் கண்டித்திருப்பதை அசட்டை செய்வதற்கில்லை. இந்திய சர்க்கார் இது விஷயத்தைக் கவனித்து, இனி அத்தகைய தவறு நேராமல் இருக்க வழி தேடுவார்கள் என நம்புகிறோம்.

## போப்பாண்டவரின் செய்தி

சென்ற வருஷம் உலகப் பிரசித்தி பெற்ற "நியூயார்க் டைம்ஸ்" பத்திரிகையின் மூலம் அமெரிக்காவுக்கு ராஜாஜி அனுப்பியிருந்த கிறிஸ்துமஸ் செய்தியில், "அணுகுண்டுகளையும் ஜலஜ குண்டுகளையும் கடலில் கொண்டு போய்க் கொட்டிவிடுங்கள்; உலகத்தில் அந்த ராட்சத குண்டுகளின் பீதி ஒழியவும் சமாதானம் ஏற்படவும் அது ஒன்றுதான் வழி" என்று யோசனை கூறியிருந்தது அன்பர்களுக்கு ஞாபகம் இருக்கலாம். கத்தோலிக்கர்களின் உலக குருவான போப்பாண்டவர் இவ்வருஷம் விடுத்துள்ள கிறிஸ்துமஸ் செய்தியில், அதே விஷயத்தைக் குறிப்பிட்டிருக்கிறார். அணுகுண்டு யுத்தம் ஏற்படாமல் தடுக்க வேண்டியது உலக சர்க்கார்களின், உலக மக்களின் கடமை என்று அவர் வலியுறுத்தியிருக்கிறார். அவ்விஷயமாகவும் அணுகுண்டுகளின் உற்பத்தியை அடியோடு தடுக்கவும் சர்வதேச ஒப்பந்தம் ஏற்படவேண்டும் என்றும் போப்பாண்டவர் கூறியிருக்கிறார். காலனிகளில் ஆதிக்கம் செலுத்தும் ஐரோப்பிய வல்லரசுகள் அங்குள்ள மக்கள் விஷயத்தில் நீதியுடனும், பெருந்தன்மையுடனும் நடந்து கொள்ள வேண்டும் என்றும் குறிப்பிட்டிருக்கிறார்.

இன்று உலக சமாதானத்துக்கு முட்டுக்கட்டையாக இருப்பது அணுகுண்டுகள் உற்பத்தியும், காலனி ஆதிக்கக் கொடுமையும்தான். இந்த இரண்டு மாபெரும் பிரச்னைகளும் தீருவதற்கு வழி பிறந்து விட்டால், உலக மக்களின் துரதிர்ஷ்டம் தீர்ந்து நற்காலம் பிறந்துவிடும் எனலாம்.

அகில உலகத்துக்கும் நன்மை பயக்கக் கூடிய போப்பாண்டவரின் புனித கிறிஸ்துமஸ் செய்திக்குக் கிறிஸ்துவ மதத்தை அடிப்படையாகக் கொண்ட ஐரோப்பிய வல்லரசுகள் செவி சாய்க்குமாக.

## அன்னதானம்

நடைபெறும் வருஷம் மகாமக வருஷம் என்பதை நேயர்கள் அறிவார்கள். மகாமகம் பன்னிரண்டு வருஷங்களுக்கு ஒரு முறை வரும் புனிதத் திருநாள். அச்சமயம் பல லக்ஷம் மக்கள் புனித நீராடக் குடந்தை மாநகரில் கூடுவார்கள். அப்படிக் கூடுபவர்களின் பசியைப் போக்குவதற்காகப் பல சமாராதனைகளும் அன்னதானங்களும் நடைபெறுவதற்குப் பல சங்கங்களும் பிரமுகர்களும் பெரு முயற்சி எடுத்துக் கொண்டிருக்கிறார்கள்.



ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ சங்கராசார்ய சுவாமிகளின் ஆக்ஞைப்படி கும்பகோணம் மடத்திலும் சமாராதனை செய்வதற்கான ஏற்பாடு நடந்து வருகிறது. மகாமகத்தை உத்தேசித்துக் கும்பகோணம் வருபவர்கள் பசியினாலும் பட்டினியினாலும் வாடக்கூடாது என்ற நல்ல நோக்கத்துடன் நிறுவப்பட்டிருக்கும் இத்தகைய அன்னதானப் பணிக்கு அனைவரும்

# கான மயம்!



**சென்னையில் டிசம்பர் மாதக் கடைசியில் ஆரம்பித்து நடைபெறும் சங்கீத நாட்டியப் பெரு விழாக்கள் தமிழ் கூறும் நல்லுலகமெங்கும் ஒலித்து மக்களுக்கு மகிழ்ச்சியூட்டி வருகின்றன.**

---

தங்களால் இயன்ற பொருள் உதவி, பண உதவி செய்து மக்கட் பண்பின் மேன்மையை நிலைநாட்ட வேண்டும். தங்கள் உதவியை ஸ்ரீ ஏ. கோபாலய்யர், மானேஜர், 'காமகோடி' 24. டபீர் நடுத் தெரு, கும்பகோணம் என்ற விலாசத்துக்கு அனுப்பி ஸ்ரீ மடத்தார் ஏற்றுக் கொண்டிருக்கும் பணிக்குப் பெரு வெற்றி அளிப்பார்கள் என்று நம்புகிறோம்.

இந்த மகாமகம் சமயத்தில் அன்னதான சிவன் சங்கத்தார் லட்சக்கணக்கான பேர்களுக்கு உணவுப் பொட்டணங்கள் வழங்கத் திட்டமிட்டிருப்பதை நேயர்கள் ஏற்கனவே அறிவார்கள். சுமார் ஆறு நிமிஷத்தில் நாற்பத்தெட்டுப் பட்டணம் படி அரிசியை நீராவியில் வேக வைக்கக்கூடிய ஆறு எவர்ஸில்வர் சட்டிகளை விக்ரம இன்ஜினீரிங் கம்பெனிக்காரர்கள் செய்திருக்கிறார்கள். எதிர்ப்பக்கத்தில் படத்திலிருப்பது அந்தச் சட்டிகளில் ஒன்று.

அன்னதான சிவன் சங்கத்தாருக்கு அரிசியாகவும் பருப்பாகவும் மற்ற உணவுப் பொருள்களாகவும் உதவ விரும்புகிறவர்கள் எங்கிருந்தும் உதவலாம். டி.வி.எஸ். ஸ்தாபனத்தார் அப்பொருள்களைக் கட்டணமின்றிக் கும்பகோணம் சேர்ப்பிக்கும் பொறுப்பை ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள் என்ற நற்செய்தியையும் இங்கே நமது நேயர்களுக்குச் சொல்லி வைக்கிறோம்.

## இன்ஷ்யூரன்ஸ் விஷயம்

பாரத நாட்டில் மகிழ்ச்சி யளிக்கக் கூடிய பல அற்புத மாறுதல்கள் மக்கள் மனத்தில் ஏற்பட்டு வருகின்றன. அவைகளில் முக்கியமானதொன்று இன்ஷ்யூரன்ஸைப் பற்றி மக்களின் மனோபாவம் மாறியிருப்பதுதான். இன்று பலர் தாமாகவே இன்ஷ்யூர் செய்து கொள்ளுகிறார்கள்.

இந்த அளவுக்கு நாம் சந்தோஷப்பட்டாலும், பொது மக்கள் தாங்கள் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனிக்குச் செலுத்தும் பணம் என்ன ஆகிறது என்பது பற்றித் தகுந்த சிரத்தை எடுத்துக் கொள்ளவில்லை என்று நியூ இந்தியா இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி ஊழியர்கள் வருத்தப்படுகிறார்கள்.

நியூ இந்தியா இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி ஊழியர் சங்கத்தின் அங்கத்தினர்கள் சென்ற டிசம்பர் 19, 20, 21 தேதிகளில் சென்னையில் கூடிப் பல முக்கியமான தீர்மானங்கள் நிறைவேற்றினர். சென்னைக் கிளையைச் சேர்ந்தவர்கள் இந்தச் சிறு மகா

## எங்கும் சங்கீதம் என்பதே பேச்சு!




நாட்டை நடத்தி யிருக்கிறார்கள். திரு சி. சுந்தரராஜன் முக்கியப் பங்கெடுத்துச் சிறப்புற நடத்தியிருக்கிறார்.

இந்தியாவிலேயே மிகப் பெரிய இன்ஷ்யூரன்ஸ் கம்பெனியின் இரண்டாயிரம் ஊழியர்கள் கொண்ட சங்கத்தினர் கூடி யோசித்துச் செய்துள்ள தீர்மானங்களை இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி நிர்வாகிகளும் அரசாங்கத்தினரும் செவிசாய்த்து ஆவன செய்வார்கள் என்று நம்புகிறோம்.

### வங்க இலக்கிய மகாநாடு

இலக்கிய உலகம் அதிசய உலகம். அதற்கு எல்லைகள் கிடையாது. ஒரு காலத்திலே தமிழ் நாட்டுக் கவிச் சக்கரவர்த்தி கம்பன் இயற்றிய ராமாயணமானது வட நாட்டு ஹிந்திக் கவிஞர் துளஸிதாஸருக்கு ராம கதையைப் பாட ஊக்கமும் உற்சாகமும் அளித்தது என்று குமர குருபரர் வரலாற்றில் படிக்கிறோம். தமிழ் நாட்டு ராமானுஜர், ஆண்டாள் முதலிய பக்த கவிஞர்களின் பாடல்கள் வடக்கிலும் பெரும் பக்த கவிஞர்களுக்கு மன எழுச்சி தந்தன! இன்று நம்முடைய யுகத்திலே ரவீந்திரநாத் டாகூர், பங்கிம் சந்திரர், சரத்சந்திரர் முதலிய வங்க இலக்கிய கர்த்தாக்களுடைய நவீனங்கள் இன்றையத் தமிழ் நாவல் யுகத்தை ஓரளவு சிருஷ்டித்தது என்று கூறினால் மிகையாகாது! ஆகவே அகில இந்திய வங்க இலக்கிய மகாநாடு இவ்வாண்டு டிசம்பர் 31, ஜனவரி, 1, 2 தேதிகளில் சென்னை ராஜாஜி ஹாலில் நடப்பதில் எவ்வளவோ பொருத்த மிருக்கிறது.

இந்த மகாநாட்டுக்கு ஸ்ரீ ராய் சௌத்ரி தலைமை தாங்குகிறார். வங்காள இலக்கியப் பகுதிக்கு ஸ்ரீ உபேந்திரநாத் காங்கூலியும் தமிழ்ப் பகுதிக்குப் பேராசிரியர் தெ. பொ. மீனாட்சி சுந்தரனாரும், தெலுங்குப் பகுதிக்கு ஆந்திர முதன் மந்திரி ஸ்ரீ பி. கோபால ரெட்டியும், குழந்தைகள் பகுதிக்கு ஸ்ரீ ஜோகேன் குப்தாவும், இசைப் பகுதிக்கு ஸ்ரீ பங்கஜ் மல்லிக்கும், ஸம்ஸ்க்ருதப் பகுதிக்கு ஸ்ரீ விவேகானந்த முகர்ஜியும் தலைமை தாங்குகிறார்கள். புகழ்பெற்ற பல வங்காளி எழுத்தாளர்கள் மகாநாட்டில் கலந்து கொள்கிறார்கள். ஒரு கலைக் கண் காட்சியும் ஏற்பாடு செய்திருக்கிறார்கள். ஸ்ரீமதி எம். எஸ். எஸ். ஸ்ரீ பங்கஜ்மல்லிக் முதலிய கலைஞர்களின் இசை விருந்தும் நடைபெறுகிறது. இத்தனை சிறப்பான வகையில் நிகழ்ச்சிகள் அமைந்திருப்பதிலிருந்து மகாநாடு வெற்றிகரமாக நடந்தேறும் என்பதில் சந்தேகமில்லை. உண்மையில் இந்த மகாநாடு இன்றைய வங்க இலக்கியத்துக்கும் தென்னாட்டு இலக்கியத்துக்கும் இன்னும் நெருங்கிய நேசத் தொடர்பை வளர்க்க உதவும் என்றும் எதிர்பார்க்கிறோம்.

# ரகுபதி  ராகவ

## 7. "வழி காட்டுவாய்!"

[அகமதாபாத் நவஜீவன் காரியாலயத்தினர் பிரசுரம் செய்திருக்கும் 'சத்தியமே தெய்வம்' என்னும் காந்தி வசன மஞ்சரியிலிருந்து ராஜாஜி எடுத்து எழுதியது]

பராசக்தி கருணை கொண்ட சக்தியா அல்லது நிய சக்தியா? என் அறிவுக்கு அது கருணை கொண்ட சக்தியாகத் தான் தோன்றுகிறது. எவ்வளவு அழிவுக்கும் இடையே உயிர் நின்று வருகிறது. எவ்வளவு பொய்க்கும் இடையே மெய் நிலைத்து நிற்கிறது. எவ்வளவு இருள் சூழ்ந்து நின்றாலும், இருளுக்கு வெளிச்சம் தோற்று விடவில்லை. உயிரும் உண்மையும் ஒளியும் கடவுளே.

கடவுளே அன்பு. கடவுளே நலன்களுக்குள் மேலான நலன்.

கடவுளைக் காண்பது என்றால் பகுத்தறிவினால் முடியாது. ஐம்புலன்களைக் கொண்டு அறிய முடியாத கடவுளை ஒருவன் புலனுக்கு அப்பாற்பட்ட சக்தியால் கண்டு விட்டால் அவன் உள்ளம் முழுதும் மாறி விடுகிறது. கடவுளைக் கண்ட உள்ளம் அதற்குமுன் இருந்த உள்ளம் அல்ல. முற்றிலும் வேறு தன்மை கொண்ட உள்ளம் ஆகிவிடுகிறது. கடவுள் உண்மை பக்தன் ஒருவனுடைய ஒவ்வொரு சிறு காரியத்திலும் புகுந்து காட்சி தருவான். புலன்கள் வழியாக நாம் அடையும் அறிவு உண்மையைப் போல் காட்டிச் சில சமயம் பொய்யாகவும் மோகமாகவும் போகும். புலன்களைச் சார்ந்து நிற்காத அறிவு நிலையான அறிவு. அத்தகைய ஞானம் கைவந்ததற்குப் பிரமாணம், ஒருவனுடைய சீலமும் பண்புமே ஆகும். உள்ளத்தில் ஈசன் கோயில் கொண்டால் பக்தனுக்கு மேம்பட்ட சீலமும் பண்பும் தாமாக வந்து சேரும். மேலே சொன்ன பிரமாணத்தை உலகம் கண்டிருக்கிறது. எல்லா நாடுகளிலும் கடவுளைக் கண்ட ஞானிகள் தோன்றி யிருக்கிறார்கள். ஒருவர் பின் ஒருவராகக் காட்சி பெற்ற மகா புருஷர்களும் ரிஷிகளும் தோன்றி மக்களுக்கு உபதேசித்தும் வழி காட்டியும் வந்திருக்கிறார்கள். எல்லாமே பொய் புரட்டு என்று தள்ளிவிடுவது கண்ணை மூடிக் கொண்டு, நான் பார்க்கவில்லை, அதனால் இல்லை என்று சொன்னபடியே ஆகும்.

இந்தக் காட்சி பெறுவதற்குமுன் அசையா நிலையுடன் உள்ளத்தில் பக்தி நிறைந்து நிற்கும். யாரேனும் காட்சி அடைந்து அந்தப் பேரின்பத்தை அனுபவிக்க விரும்பினால் முதலில் பக்தி பூரணமாக வேண்டும். பக்திக்கு அடையாளம் சீலம். சத்தியமும் அன்பும் வாழ்க்கையில் சர்வாதிபத்தியம் கொள்ள வேண்டும். உண்மைக்கு மாறானது எதையும், அன்புக்கு மாறானது எதையும் ஒப்புக் கொள்ள மாட்டேன் என்று தீர்மானித்த பின்னரே பக்தியில் பயில வேண்டும். அதுவே க்ஷேம மார்க்கம். உண்மை மார்க்கத்திலும் அன்பு மார்க்கத்திலும் சேராத மார்க்கம் பக்தி மார்க்க மாகாது.

உலகத்தில் ஏன் பாபம் இருந்து வருகிறது. இது எனக்கு விளங்கவில்லை. எவ்வளவு ஆராய்ந்து பார்த்தாலும் இந்தச் சிக்கலைத் தீர்த்துக் கொள்ள முடியவில்லை. ஆண்டவனுக்குச் சமமாக ஞானம் படைத்திருந்தவர்களே தீர்த்திருக்க முடியும். என் சக்தியின் வரம்பை அறிந்து கொண்டு அடக்கத்துடன் நான் தீர்மானித்துக் கொண்டது இவ்வளவே. என்னால் ஆகக்கூடிய காரியம், என்னால் செய்ய வேண்டிய கடமை, பாபத்தை வெறுப்பது ஒன்றே. ஆண்டவனுடைய பொறுமையைக் கண்டு வியந்து வருகிறேன். நமக்கு வரும் கோபம் அவ

**ராஜாஜி**

னுக்கு இல்லை. ஆகா! எவ்வளவு பாபங்களை எவ்வளவு காலம் பொறுத்து வருகிறான். ஆண்டவனைப் பாபம் தீண்டாது. அவனே அதற்கு அடி ஆயினும் அது அவனைத் தீண்டாது. இவ்வளவே நான் உணர்ந்தது.

பாபத்தோடு போர் செய்ய வேண்டியது என்னுடைய கடமை. இதையும் உணர்ந்தேன். உயிரைக் கொடுக்கும் அதர்மத்தினோடு போர் புரிய வேண்டும். இல்லாவிடில் கடவுளைக் காணும் ஆசையில் பயனில்லை. என் சிறு அநுபவத்திலிருந்தே ஒன்று கண்டு கொண்டேன். எம்மட்டும் நான் அதர்மத்தை ஒழித்து நன்னெறியில் நிற்கிறேனோ அந்த அளவுக்கு ஆண்டவனை அணுகிச் செல்கிறேன். எந்த அளவுக்கு தருமத்தினின்று அகல்கிறேனோ அந்த அளவுக்குப் பகவானுடைய காட்சி விலகிப் போகிறது. என் பக்தியும் சிரத்தையும் தற்போது எம்மட்டு உண்மை எம்மட்டு வேஷமோ தெரியவில்லை. வேஷமாக இருப்பதை விட்டு நான் விரும்பிய அளவில் அது உண்மையான பக்தியும் சிரத்தையும் ஆகி விட்டால் ஆண்டவன் எனக்குக் காட்சி கொடுத்தே விடுவான். அவனுடைய தரிசனத்தை அடைவேன் என்பது நிச்சயம். அசையாமல் நிற்கும் ஒரு மலையைப்போல் என்னுடைய சிரத்தை சஞ்சலம் நீங்கி நிற்க வேண்டும். இமய மலையின் கொடுமுடிமேல் கவிந்து நிற்கும் உறை பனியைப் போல் என் சிரத்தையும் பக்தியும் மாசற்ற முழு வெண்மை அடைய வேண்டும். அப்போதல்லவோ ஆண்டவனை நான் நெருங்க முடியும்!

கிறிஸ்துவ யோகியான நியூமன் தன் அனுபவத்தைப் பாடினார். அவருடன் நாமும் பிரார்த்திப்போமாக:—

**இருள் சூழ்ந்து நிற்கிறது ஆண்டவனே!**
**பரஞ்சுடரே வழிகாட்டுவாய்!**
**வெகு தூரத்தில் இருக்கிறேன்**
**பேரிருட்டில் அலைகிறேன்**
**என் அப்பனே! எப்பொழுது ஊர்போய்ச் சேருவேன்!**
**வழி காட்டுவாய்! எந்தையே!**
**இருளில் வழிமுழுதும் தென்படவில்லை**
**ஓரடி ஓரடியாகப் பிறழாமல் வைத்துச் சென்றேனானால் போதும்**
**தடுமாறும் காலுக்குக் காவல் நிற்பாய்**
**என் பாதத்துக்கு வெளிச்சம் காட்டுவாய்**
**உன்னிடம் ஒப்படைத்து விட்டேன்**
**ஓரடி ஓரடியாகத் தடம் பிறழாது சென்றால் போதும்**
**என் தளர் நடைக்கு அருள்வாய், ஆண்டவனே!**

[யங் இந்தியா 11-10-28]

# தமிழ் கூறும் நல்லுலகம்

கல்கத்தா நாரீமணிகளின் துணிச்சலைப் பாராட்டுகிறோம். இதுகாறும் நாடக சபைகள் என்றால் ஆடவர்களே நடத்தும் நாடக சபைகளாகவே இருந்து வந்ததைப் பார்த்து வந்திருக்கிறோம். ஆனால் சென்ற ஆண்டிலிருந்து கல்கத்தா மாதர்கள் சேர்ந்து "லேடீஸ் தியேட்டர் குரூப்" என்ற பெயரில் அமெச்சூர் நாடக சபை ஏற்படுத்தி நடத்தி வருகிறார்கள். சமுதாயத்தில் அந்தஸ்துள்ள நாரீமணிகள் சேர்ந்து நடத்தும் சங்கமாதலால் இச் சங்கத்துக்கு லாப நோக்கமில்லை. இச் சங்கத்தார் பல நாடகங்கள் நடித்துப் பல பொது நலக் காரியங்களுக்கு நிதி உதவி புரிந்திருக்கிறார்கள். சென்ற டிசம்பர் 11ம் தேதி இச் சங்கத்தின் ஆண்டு விழா டாக்டர் ஸி. பி. ராமசாமி அய்யர் தலைமையில் சிறப்பாக நடந்தது. வங்க கவர்னர் டாக்டர் எச். ஸி. முகர்ஜி வந்திருந்து சிறப்பித்தார். இச்சங்கத்தின் ஆண்டு விழாவில் வயலின், வீணை, சிதார், ஜலதரங்கம் முதலிய வாத்திய இசைகளும், பரதநாட்டியம், கதக் முதலிய நடன நிகழ்ச்சிகளும், ஹிந்தி நாடகம், தமிழ் நாடகம் முதலிய நாடக நிகழ்ச்சிகளுமாக ஒரே கோலாகலமாக இருந்தது! இச் சங்கத்தின் பெரும்பாலான அங்கத்தினர்கள் தமிழர்கள் என்பது பெருமிதம் அளிக்கும் விஷயம்!

நாகபுரி பைன் ஆர்ட்ஸ் ஸொஸைட்டி அமெச்சூர் நாடகக் குழுவினர் கடந்த வாரத்தில் ராவ் பஹதூர் பி. சம்பந்தம் அவர்களின் "காதலர் கண்கள்" என்ற நாடகத்தை நடத்தினர்.

கதாநாயகி தாராவாக நடித்த ஸ்ரீமான் உமையாள்புரம் சீதாராமன் மிக அழகாக நடித்தார். ஆண் குரலே இல்லாமல் பெண் குரலுடன் வசனங்களைப் பேசியதும் பாடியதும் வேஷப் பொருத்தமும் மிக நன்றாக இருந்தன. சில உணர்ச்சி மிகுந்த கட்டங்களில் இவரது நடிப்பு ஜனங்களிடம் பலத்த கரகோஷத்தைப் பெற்றது.

இந்த நாடகத்தின் போது 'ஹிதவாதா' பத்திரிகையின் ஆசிரியரான ஸ்ரீமான் வி. எஸ். வெங்கடராமன் பேசுகையில் நடிகர்களின் நடிப்பைப் பாராட்டி விட்டு, இது மாதிரி இந்தக் கோஷ்டி நாகபுரிவாசிகளுக்கு அடிக்கடி பல நாடகங்களை நடத்த வேண்டும் என்று கூறினார். கடைசியில் சபையின் தலைவர் ஸ்ரீமான் ஆர். எஸ். மணி வந்தனோபசாரம் கூறினார். இந்த நாடகத்தின் அமைப்பை ஸ்ரீமான் ஏ. சுந்தரேசன் ஸ்ரீமான் எல். எஸ். கோபாலன் அவர்களும் சங்கீத அமைப்பை ஸ்ரீமான் ஆர். எஸ். மணி அவர்களும் நிர்வகித்தார்கள்.

30-12-55 முதல் மகத்தான ஆரம்பம்

# இன்று முதல்

ஸ்ரீகிருஷ்ணா
ஸ்டார்
உமா & கபாலி

மற்றும் தென்னாடெங்கும்

ஸ்வராஜ் பிக்சர்ஸ்
அளிக்கும்
என்.ஏ.டி யின்

# ஜெயசிம்ஹன்

தமிழ்

டைரக்ஷன்: யோகானந்த்

பூர்ண உரிமையாளர்
வீராசாமி பிக்சர்ஸ்
கோயம்புத்தூர்



# கடமையும் பாசமும்

இன்ஸ்பெக்டர் சதானந்தம் ஒரு முறை முகவாய்க் கட்டையைத் தடவி விட்டுக் கொண்டார். அவர் தீவிரமான யோசனையில் ஆழ்ந்திருக்கிறார் என்பதே அதன் அர்த்தம். கண்களை மூடியபடி நாற்காலியில் சாய்ந்திருந்தார் அவர்.

அரை மணி நேரம் சென்றது.

முந்நூற்று நாலு அவர் எதிரில் வந்து நின்று, "ஸார்" என்றான். பதிலில்லை. மறுமுறை, "ஸார்" என்று உரக்கக் கூவினான். சதானந்தம் மெள்ளக் கண்களைத் திறந்தார். "என்ன!" என்றார். ஒரு உறையிலிட்ட கடிதத்தை அவரிடம் கொடுத்தான். அதை வாங்கிப் பிரித்துப் படித்த அவர் முகம் சுருங்கியது. "போய்ச் சிங்காரத்தை உடனே வரச் சொல்" என்றார். ஒரு சல்யூட் அடித்து விட்டுச் சென்றான் அவன். சிங்காரம் ஒரு சி. ஐ. டி. நல்ல திறமைசாலி.

இன்ஸ்பெக்டர் சதானந்தம் அவர் இல்லாமலேயே எவ்வளவோ கேஸ்களை நடத்தி யிருக்கிறார். ஆனால் இப்போது வந்திருந்த கேஸ் மிகவும் சிக்கலானதாக இருந்தது.

பிரபல கொள்ளைக்காரன் முனியாண்டி போலீஸ் இலாகாவுக்கு டிமிக்கி கொடுத்துக் கொண்டு மாயாஜால வித்தைகள் செய்து கொண்டு வந்தான். கடந்த எட்டு வருடங்களாக அவன் புகுந்து கொள்ளை அடிக்காத பெரிய மனிதர்கள் பங்களாக்களே கிடையாது என்று சொல்லலாம். அசகாய சூரனாக இருந்தான். அவனை உடனே பிடிக்க ஏற்பாடு செய்யுமாறு மேலிடத்திலிருந்து உத்தரவு வந்திருந்தது.

முந்நூற்று நாலு கொண்டு வந்த கடிதம் தான் அது.

ஏற்கனவே, சில நாட்களாக அதே விஷயத்தை, யோசித்துச் சதானந்தத்தின் மூளை குழம்பிப் போயிருந்தது. போதாக்



குறைக்கு அவசர உத்தரவும் வந்து விடவே அவருக்கு ஒன்றும் தோன்றவில்லை.

சிங்காரம் ஊரில் இல்லை. ஏதோ கேஸ் விஷயமாக வெளியூர் சென்றிருப்பதாய்த் தகவல் வந்தது. இனிமேல் என்ன செய்யலாம் என்று யோசித்தார். திருடன் வரக் கூடியதாகத் தோன்றும் இடங்களுக்குப் பாதுகாப்பு அனுப்பியும், அவர்கள் கண்களில் மண்ணைத் தூவி விடுகிறான். அவன் இருக்கும் இடத்தை மட்டும் எவ்வளவோ முயன்றும் யாராலும் அறிய முடியவில்லை.

இன்ஸ்பெக்டர் சதானந்தம் சோர்வுடன் வீடு திரும்பினார்.

மதனபள்ளியில் இன்ஸ்பெக்டர் சதானந்தத்தைத் தெரியாதவர்கள் இல்லை. ஆறடி உயரத்துக்கு நல்ல சிவப்பான, ஆஜானுபாகுவான தேகம்; நீண்ட நாசி; நீண்டு வளர்ந்த மீசை, பார்க்கக் கம்பீரமாகக்காணப்படுவார். பார்வதி அவருக்கேற்ற மனைவியாக வாய்த்திருந்தாள்.

* * *

வீட்டுக்கு வந்த சதானந்தம், அலுப்புடன் உடைகளைக் களைந்து, குளித்து விட்டு வந்தார். அச்சமயம், அவருடைய பால்ய நண்பர் ராமய்யா வந்தார்.

"வா, அப்பா! என்ன அதிசயமாக இருக்கிறதே, உன் வரவு!" என்றார் சதானந்தம்.

"ஆமாம் அதிசயம் தான். நானாவது உன்னை வந்து பார்த்தேன். உனக்கு அது கூடக் கிடையாது. நண்பனாயிற்றே ஒரு முறை போய்ப் பார்ப்போம் என்று தோன்றியதா! சொல்!" என்றார் ராமய்யா.

"நான் என்ன செய்வேன்! என் பிழைப்பு இப்படி. முனியைப் போட்டுக் குழப்பிக் கொள்ள வேண்டியிருக்கிறது. இந்தத் தொந்தரவுகளெல்லாம் இன்றி இரண்டு நாட்கள் நிம்மதியாக இருக்கலாம் என்றால் எங்கே முடிகிறது!" என்றார் சதானந்தம்.

"ஆமாம், அண்ணா! அவர் இப்படியேதான் சொல்லிக் கொண்டு வருகிறார். எப்போது பார்த்தாலும் 'டூட்டி டூட்டி' என்ற நினைவு தான். வீட்டு நினைவே கிடையாது.

"அதுவும் கொஞ்ச நாளாகப் பிரமை பிடித்தாற் போல் இருக்கிறார். முகத்தில் சிரிப்புக் களையே கிடையாது. சதா கவலைதான்" என்றாள் பார்வதி சுவாதீனமாக.

தம் மனைவி கூறியதைக் கேட்டு இலேசாகப் புன்முறுவலை உதட்டில் நெளிய விட்டார் சதானந்தம். "இதோ, பார் ராமய்யா! இந்த முனியாண்டியைப் பிடித்து விட்டுத்தான் தூங்கப் போகிறேன். அது தான் என் கவலைக்குக் காரணம். இல்லா விட்டால் எனக்கென்ன பிள்ளையா, குட்டியா, கவலைப்பட!" என்றார். உடனே நாக்கைக் கடித்துக் கொண்டார். அந்தச் சொல் தவறி வந்து விட்டது. பார்வதியை நோக்கினார். அவள் முகம் சுருங்கியிருந்தது. அந்த வார்த்தைகளை 'ஏன் சொன்னோம்' என்றாகி விட்டது அவருக்கு.

அதற்குள் பேச்சை மாற்ற உத்தேசித்த ராமய்யா, "என்ன சதானந்தம், தங்கச்சி சொல்வதைப் போல், வேலை என்றால் அப்படித்தான் இருக்கும். அதையே எண்ணிக் கொண்டிருந்தால் முடியுமா! எப்படியாவது இரண்டு நாள் லீவில் நீ என்னுடன் வரவேண்டியது தான். இல்லா விட்டால் நான் நகரப்போவதில்லை" என்றார் சிரித்துக் கொண்டே.

"அப்படியே நீ இங்கேயே இருப்பதில் எனக்கொரு ஆட்சேபணையும் கிடையாது" என்றார் சதானந்தம், வேடிக்கையாக.

"சரி தான் போ! நான் வந்த வேலை என்ன! நீ சொல்வதென்ன! உனக்கு நினைவு இருக்கிறதா! மாதவரம் போகும் ரஸ்தாவின் நடுவில் பெரிய காடு. முன்பு நீ ஒரு புலியைச் சுடவில்லையா! அதே இடத்திலேதான்—" என்று சொன்னார் ராமய்யா.

"ஆமாம், ஆமாம்!"

"அதே இடத்தில் ஒரு பெரிய புலி. இரவில் ஊரில் வந்து மேய்கிறது. பசுக்களையும் கோழி, ஆடு முதலியவைகளையும்......"

"அடடா, அப்புறம்!"

"அப்புறம் என்ன, எவ்வளவோ பேர் பார்த்து விட்டார்கள். அது இருக்கும் இடமே தெரிய வில்லை. அதான் உன்னைப் பார்த்து விட்டு அழைத்துப் போகலாம் என்று வந்தேன்" என்று கூறினார் ராமய்யா.

"இப்பொழுது நான் எப்படி வர முடியும்! உடனே திருடனைப் பிடிக்கும்படியும், அவன் அகப்பட்டால் சுட்டு விடும்படியும் உத்தரவு வந்திருக்கிறது. இந்தச் சமயம் நான் எப்படி வர முடியும்!" என்றார் சதானந்தம்.

"எப்படியாவது நீ வந்து தான் ஆக வேண்டும். ஊரில் ஜனங்கள் படும் கஷ்டம் கொஞ்சநஞ்சமல்ல. நாளுக்கு நாள் புலியின் கொடுமை பொறுக்க முடியவில்லை. இது வரை அது அடித்துத் தின்ற ஜீவன்கள் கணக்கற்றவை. உடம்பு சரியில்லை என்று கூறி இரண்டு நாட்கள் ரஜாவில் வந்து விட்டுப் போகலாம்" என்றார் ராமய்யா.

சதானந்தம் யோசித்தார். ஒரு புறம் கொள்ளைக்காரன். மறுபுறம் புலி. இரண்டுக்கும் நடுவில் தமக்குத் தோல்வி ஏற்படக் கூடாதே என்ற கவலை. தவிரவும் அந்த மாதிரி காட்டுப் பிரதேசம் கொள்ளைக்காரர்களின் உறைவிடமாகவும் இருக்கலாம் அல்லவா! இப்படிப் பலவாறு எண்ணமிட்ட பின்னரே ராமய்யாவுடன் கிளம்ப அவர் இணங்கினார்.

* * *

மாதவரம் போகும் ரஸ்தா அடர்த்தியான காடுகள். இருபுறமும் காட்டாறு வேறு. பெரிய மலைகளும், சிறிய குன்றுகளுமாக வரிசையாகக் காட்சியளித்தன. மாதவரத்திலிருந்து கடப்பைக்கு வரும் வழியில் சிறிய சிறிய கிராமங்கள் இருந்தன. ரஸ்தா கரடு முரடாக இருக்கும். கிராம ஜனங்கள் அதைப் பொருட்படுத்துவதில்லை.

ராமய்யா மாதவரத்தில் பெரிய மிராசுதார். நல்ல செல்வாக்கு உடையவர். கிராம ஜனங்களிடம் மிகவும் அன்பாக இருந்தார். அவர்கள் நலனுக்காகவே பாடுபட்டார் என்றால் மிகையாகாது. அந்தக் கிராமத்து ஜனங்கள் அவரைத் தங்கள் தந்தையென எண்ணி வந்தனர்.

ராமய்யாவுடன் சதானந்தம் புறப்பட்ட போது பார்வதியும்கூட வருவதாகக் கேட்டுக் கொண்டாள். ஆனால் சதானந்தம், "நான் இரண்டு நாட்களில் திரும்பி விடுவேன்" என்று கூறி விடைபெற்றுச் சென்றார்.

ராமய்யாவுக்குச் சொந்தமான பெட்டி வண்டியில் அவர்கள் புறப்பட்டார்கள். மாடுகள் நல்ல வேகமாகச் சென்றன. ஆனால் சில இடங்களில் ரஸ்தா சரியில்லாததினால் தலையில் அடிக்கடி இடித்துக் கொண்டிருந்தது. ஊர் போய்ச் சேரும் போது மணி பத்தாகிவிட்டது.

முன் கூட்டியே அவர்கள் வருவதை யறிந்து விருந்து தயாராகி இருந்தது. பின்னால் வரப் போகும் அதிர்ச்சியை அறியாத சதானந்தம் உல்லாசமாக உணவருந்திக் கொண்டிருந்தார்.

மறு நாள். கிராம ஜனங்கள் ராமய்யாவின் வீட்டு வாயிலில் நின்று கோஷமிட்டனர். அன்று இன்ஸ்பெக்டர் சதானந்தம் தமது ஆட்களுடன் துப்பாக்கிகள் சகிதமாக வேட்டைக்குக் கிளம்பிக் கொண்டிருந்தார். அவரை வழியனுப்பக் காத்திருந்தனர் பலர். இன்ன இடத்திலிருந்து புலி வருகிறது என்பதைத் தெரியப்படுத்தினார்கள். இரண்டு நாட்கள் தங்குவதற்கான வசதியுடன் புறப்பட்டார்கள்.

மலையின் சரிவான இடத்தில் பயங்கரமான காடு. பகலுக்கும் இரவுக்கும் அந்த இடத்தில் ஒரே நிலைதான். அவ்வளவு இருண்டிருந்தது. சதானந்தம் மிகவும் ஜாக்கிரதையாக நாலா புறமும் துப்பாக்கியுடன் ஆட்களை நிறுத்தி, ஒருபுறம் பதுங்கியபடி தாமும் நின்றார்.

எங்கும் இருள். 'ஙொய்' என்ற சப்தத்தைத் தவிர வேறு ஒன்றும் கேட்க வில்லை. கையில் டார்ச்சு விளக்குகளுடன் தயாராக நின்றிருந்தனர் அவர்கள். உதிர்ந்த இலைச் சருகுகளின் மேல் சிறிய பிராணிகள் ஓடும்போது இலைகள் சலசலவென ஓசை எழுப்பும். ஆட்கள் பதறி யெழுவார்கள். சதானந்தம் சிரிப்பார்.

இரவு மணி இரண்டு. அடர்த்தியான பெரிய மரத்தின் சந்தின் வழியே இருவிழிகள், இரு நெருப்புப் பிழம்புகள் போல் ஜொலித்தன. அந்த விழிகள் மெள்ள மெள்ள மேல் நோக்கி வந்தன. ஆம். அது ஒரு வேங்கை. ஆறடி உயரத்திற்குப் பார்க்கப் பயங்கரமாக இருந்தது. ஒரு நிமிடத்தில் எல்லோர் கண்களும் அத் திசையினை நோக்கியபடி குத்திட்டாற் போல் நின்றன. அவர்கள் உடல் சிலிர்த்தது. கைகள் நடுங்கின. வேங்கை பாயத் தயாராகி விட்டது. ஆனால் தன்னைச் சுற்றி எட்டுத் திக்கிலும் துப்பாக்கியுடன் நின்றிருந்தவர்களைப் பார்த்ததாகத் தெரியவில்லை. ஒரே ஆளைத் தான் அது உன்னிப்புடன் நோக்கியது. அப்படி அது எல்லோரையும் பார்த்திருந்தால் தப்பியோட முயன்றிருக்கும். தவிர கதையே மாறுபட்டிருக்கும்.

சதானந்தம் தாமதிக்க வில்லை. சுட்டு விட்டார். புலி உறுமி இடிமுழக்கம் செய்தது. தொடர்ந்து துப்பாக்கி ரவைகள் அதை நோக்கி ஒவ்வொரு மூலையிலிருந்தும் வெடித்தன.

திடுமென எங்கிருந்தோ 'நிறுத்து' என்ற குரல் கேட்டது. சதானந்தத்தின் துப்பாக்கியிலிருந்து கிளம்பிய ரவை புலியை மறைத்து நின்று 'நிறுத்து' என்று கூறிய உருவத்தைத் தாக்கியது. "அம்மா" என்று அலறியபடி சாய்ந்தது அந்த உருவம். எல்லோரும் பதறியபடி ஓடினர். அது ஒரு வாலிபனின் உருவம். நல்ல சிவந்த மேனி. கட்டுமஸ்தான உடல், துப்பாக்கி ரவை அவனது தோள் பட்டையில் உராசிச் சென்றதால் ரத்தம் வழிந்தது. துணியைக் கிழித்துக் கட்டுப் போட்டார்கள். அவன் மயக்கமாகக் கிடந்தான்.

புலி இறந்து விட்டது. புலி கிளம்பி வந்த இடத்தைப் பார்வையிட்டபோது மரத்தின் பின்புறமிருந்து ரகசிய வழி தெரிந்தது. சதானந்தம் அடிபட்ட வாலிபனையும், இறந்த புலியையும் ராமய்யாவின் வீட்டுக்கு அனுப்பி விட்டு, தம் ஆட்களுடன் ரகசிய வழியாக இறங்கிச் சென்றார். கீழே பூமிக்கு அடியில் அமைந்த அந்த நிலவறை ஒரே இருள் சூழப் பெற்றிருந்தது. டார்ச்சு விளக்குகளின் வெளிச்சத்தில் பார்வையிட்ட போது, அப்பப்பா எத்தனை பொருள்கள்! பணமும், பண்டங்களும், நகைகளுமாகக் கணக்கற்ற பொருள்கள் கிடைத்தன. இன்னும் பார்த்தபோது ஒரு கயிற்றுக் கட்டிலில் ஒரு கிழவன் படுத்திருந்தான். ஆரவாரம் கேட்டு இவர்களை நோக்கி, "என் மகன் எங்கே!" என்றான் மெல்லிய குரலில். அந்த வாலிபன் இவன் மகனா என வியந்தார் சதானந்தம்.

எல்லாப் பொருள்களையும் பத்திரப் படுத்தி விட்டு, கிழவனுடன் கிராமத்துக்கு வந்தார் சதானந்தம். அங்குதான் ஒரு அதிர்ச்சி காத்திருந்தது. வாலிபன் கட்டில் ஒன்றில் படுத்திருந்தான். வைத்தியரை அழைத்துக் கைப் புண்ணுக்குக் கட்டுக் கட்டினார்கள். ஊர் ஜனங்கள் திரண்டு வந்தார்கள்.

கிழவன் நடுங்கிய குரலில் தன் கதையைக் கூறிக் கொண்டிருந்தான்.

"நாகப்பட்டினத்து மாரியம்மன் திருவிழா விலே கூட்டத்தில் மூன்று வயதுக் குழந்தை யொன்றை எடுத்து வந்தேன். நகைக்காகத் தான் தூக்கிவந்தேன். ஆனால் என் பெண்ஜாதி குழந்தையைப் பார்த்துவிட்டு விடமாட்டேன் என்று கூறி விட்டாள். ராசாமாதிரி இருந்தது சாமி இது. என் தொழிலைத்தான் அவனும் செய்கிறான். அவன்தான் சாமி என்னைக் காப்பாற்றுகிறான். எதுக்கும் அஞ்ச மாட்டான். புலி, கரடி எல்லாம் அவன் சொன்னபடி ஆடும். ஒரு புலியைக் கூட வளர்த்தோமுங்க. அதுன்னா முனியாண்டிக்கு உயிர். ஆமாங்க, முனியாண்டிதான் அவனோட பேரு. அந்தப் புலியோடு அவன் நாய்க்குட்டியிடம் பழகுகிற மாதிரி பழகுவான்"—இப்படிக் கூறிவிட்டு, "ஏன் சாமி, என் மகன் பிழைச்சுடுவானா!" என்று கண்களில் நீர் மல்கக் கேட்டான்.

இன்ஸ்பெக்டர் சதானந்தம் கட்டிலில் படுத்திருந்த வாலிபனை நெருங்கி, அவனையே சற்று நேரத்துக்கு உற்று நோக்கினார். அவன் அயர்ந்து படுத்திருந்தான். சட்டென அவர் பார்வை அவன் கழுத்துப் பட்டையில் சென்று நின்றது—அங்கே பெரிய கறுப்பு மச்சம்! ஆம்! கிழவன் கூறிய கதையும் சேர்ந்ததில் அவர் தலை சுழன்றது. கண்கள் இருண்டன. மெள்ள வந்து நாற்காலியில் அமர்ந்து கொஞ்சம் குளிர்ந்த நீர் கொண்டுவரும்படி சைகை காட்டினார். ராமய்யா பயந்து விட்டார். ஓடிச் சென்று தண்ணீருடன் வந்தார். அதைப் பருகியபின் சற்றுத் தெளிவுடன் காணப்பட்டார்.

திடீரென்று எழுந்த சதானந்தம், "ராமய்யா நான் ஊர் சென்று போலீஸையும், சிங்காரத்தையும் அனுப்புகிறேன். இவர்களை அது வரையில் பத்திரமாகப் பாதுகாத்து வை" என்று கூறினார். அவர் முகம் வெளிறி

யிருந்தது. உடல் நடுங்கிக் கொண்டிருந்தது. ராமய்யா திடுக்கிட்டார்.

"சதானந்தம், உனக்கு உடம்புக்கு என்ன! வைத்தியரை அழைக்கிறேன்" என்று கூறினர்.

"ராமய்யா, வேண்டாம். நான் போய் வருகிறேன்" என்று கூறிப் புறப்பட்டார். பிரமித்து நின்றார் ராமய்யா. இப்படித் திடுதிப்பென்று சதானந்தம் புறப்பட்டது ஏனென்றே விளங்கவில்லை அவருக்கு.

பெட்டி வண்டி வேகமாகப் போய்க் கொண்டிருந்தது. காட்டுப் பாதையில் அமைதியான நிலையில் புதர்களிலிருந்து வரும் ஒரு விதமான சத்தத்தைத் தவிர்த்து வேறொன்றும் இல்லை. வண்டிக்காரன் தெம்மாங்கு பாடியது அவருக்கு வேதனை யளித்தது. அவர் மனம் கொந்தளிக்கும் கடலின் நிலைமையை ஒத்திருந்தது. தூக்கம் தனிய வில்லை. பெரிய வெற்றியுடன் புலியை வீழ்த்தி, பிரபல கொள்ளைக்காரனையும் பிடித்த அவர் அந்த வெற்றியை விதியாக எண்ணியது ஏன்!

சிந்தனை ரேகைகள் அவர் முகத்தில் படர்ந்தன. அப்பொழுது அவர் வாலிபர். வேலையில் அமர்ந்த புதிது. அவர் மனைவியின் பிறந்த ஊர் நாகப்பட்டினம். சொர்ண விக்கிரகம் போன்ற அவர்கள் மைந்தன், கண்ணனுக்கு அம்மன் சன்னிதியில் வேண்டுதல் நிறைவேற்ற வந்திருந்தாள் பார்வதி. வடதேசத்தில் ஒரு மூலையில் அவர் இருந்தார்.

அன்று நடுநிசியில் தந்தி வந்தது. சதானந்தத்தின் கைகள் நடுங்கின. தந்தியைப் படித்தவர் தலை சுற்றிக் கீழே விழுந்து விட்டார். காரணம் 'அம்மன் திருவிழாவின் கூட்டத்தில் தன் மகன் கண்ணனைக் காணவில்லை' என்ற செய்திதான். பதறிய உள்ளத்துடன் இரவைக் கழித்துவிட்டு காலையில் நாகப்பட்டினம் வந்து சேர்ந்தார்.

ஆனால் வீட்டுக்கு வந்ததும் மனைவியின் கதறல் ஒலி அவரை வரவேற்றது. எங்கு தேடியும் குழந்தை அகப்பட வில்லை. உடல் முழுவதும் நகைகள் அணிவிக்கப்பட்டிருந்ததினால் திருடன் குழந்தையைத் தூக்கிச் சென்று விட்டான். நகைகளே குழந்தைக்கு எமனாக முடிந்தது என்று எண்ணினார்கள்.

இந்தச் சிந்தனை கலைந்தபோது அவருக்குக் கதறி அழ வேண்டும் போலிருந்தது.

கிழவன் கூறிய வார்த்தைகளிலிருந்து அந்த வாலிபனே அவர் மகன் என்று தெரிந்து விட்டது. இதைப் பார்வதி அறிந்தால்...! 'இதை நாம் அவளிடம் வெளியிடக் கூடாது. ஐயோ, வேண்டவே வேண்டாம்' என்று தீர்மானித்தார் சதானந்தம்.

வீடு வந்து சேர்ந்த சதானந்தத்தைப் பார்த்த பார்வதி, "என்னங்க, இப்படித் திடீர் என்று வந்துவிட்டீர்கள்! உடம்புக்கு என்ன!" என்று பதறினள். சதானந்தம் படுக்கையில் படுத்தார். சொல்லவும் முடியாமல் அடக்கவும் முடியாமல் மனம் புழுங்கினார்.

* * *

'பிரபல கொள்ளைக்காரன் முனியாண்டி பிடிக்கப்பட்டான். மாதவரம் காட்டில் இருந்த பெரிய வேங்கை சுட்டுக் கொல்லப்பட்டது. இன்ஸ்பெக்டர் சதானந்தத்தின் திறமை மிக்க செயல்' என்று கொட்டை எழுத்துக்களில் தினசரிகளில் பிரசுரமாகியிருந்தது.

அன்று இன்ஸ்பெக்டர் சதானந்தத்தை வரவேற்று உபசரிக்க லக்ஷக்கணக்கான ஜனங்கள் திரள் திரளாகக் கூடி இருந்தார்கள். ஆனால் பெருத்த ஏமாற்றம் காத்திருந்தது. ஒரு போலீஸ் ஜவான் ஒரு கவரைக் கொண்டு வந்து கொடுத்தான். சர்க்கிள் இன்ஸ்பெக்டர் அதைப் பிரித்துப் படித்தார். முகத்தில் ஏக்கத்தின் சாயல் படர்ந்தது. அது இன்ஸ்பெக்டரின் ராஜிநாமாக் கடிதம்.

பெயரும், புகழும், வெகுமானமும் அவரை அடையக் காத்திருந்தன. ஆனால் அவர் எல்லாவற்றையும் உதறிவிட்டுப் போய் விட்டார். கூடியிருந்த கூட்டம் அசைவற்று நின்றது.

* * *

தெற்கே திருவனந்தபுரம் போகும் ரயிலில் அமர்ந்திருந்த இன்ஸ்பெக்டர் சதானந்தமும் பார்வதியும் ஒருவரோடு ஒருவர் பேசவில்லை. பார்வதிக்குத் தன் கணவர் தமக்கு வரவிருந்த பெரும் புகழை ஏன் விரும்பவில்லை என்பது விளங்காத புதிராகவே இருந்தது.

சதானந்தத்தின் மனம் ஒரு நிலையில் இல்லை. அந்த ஓடும் ரயில் வேகத்தைவிட அதிக வேகத்தில் அவரது இதயம் அடித்துக் கொண்டது. ஒருபுறம் கடமை, மறுபுறம் பாசம். இவை இரண்டுக்கும் இடைவிடாது நடந்த போட்டி முடிவில் கடமையின் பக்கமே தலை தூக்கச் செய்தது.

மறுமுறை தம் மகனைப் பார்க்கச் சகியாது, அவன் தண்டனை பெறுவதைத் தம் கண்களால் காணக் கூசி, தம் கடமைக்குப் பங்கம் வராது தடுப்பதற்காக அவர் தம் பதவியை ராஜிநாமா செய்தார்.

பார்வதி தன் கணவர் ராஜிநாமா செய்தார் என்றதும் திடுக்கிட்டாள். ஒரு பெரிய கொள்ளைக்காரனைப் பிடித்ததற்குப் பெருமைப் பட வேண்டியவர் இக்கிரமை பிடித்து முகம் வெளுத்துக் காணப்பட்டதால் அவளுக்குக் கொஞ்சம் கவலையாகவும் இருந்தது. ஆனால் கணவரைக் கேட்க அஞ்சினாள். அதிக சிரமத்தால்தான் இக்கிலேயோ என எண்ணினாள். பாவம்! தன் பெற்ற மகன் கொள்ளைக்காரன் என அவள் அறிவாளா! அவன் தண்டனை அடைவதை அவள் நெஞ்சம் சகிக்குமா!

சதானந்தமும் அவள் அறியுமுன் அந்த ஊரை விட்டே கிளம்பிவிட்டார். நாளை அவனை ஊர்வலமாக அழைத்துச் செல்வார்கள். ஆம். பலநாள் அகப்படாமல் அசகாய சூரனாய் மாய மனிதனாக இருந்த கொள்ளைக்காரனை எல்லா ஜனங்களும் பார்க்கப் போகிறார்கள்! ஐயோ, தான் பெற்ற செல்வமகன் தன் கையாலேயே பிடிபட்டுத் தண்டனை அடைய வேண்டுமா! கடவுளே, செல்வமாக வளரவேண்டிய மகன் சிறையில் அடைபடப் போகிறான். அவர் கண்கள் கலங்கின.

கபடமறியாது, நடந்தவைகளை அறியாது வானவெளியைப் பார்த்துக் கொண்டிருந்த பார்வதியின் முகத்தைப் பார்த்தார் சதானந்தம். அவள் கண்களில் நீர் நிறைந்திருந்தது.

'டடக்,, 'டடக்,' என்று வண்டிச் சக்கரம் எழுப்பிய ஒலி 'கடமை,' 'கடமை' என்பது போன்று அவர் காதில் ஒலித்தது.



# ஸ்ரீ ஷண்முகானந்தா
# பைன் ஆர்ட்ஸ் & சங்கீத சபா (Regd.)

292, பிளாங்க் ரோடு, பம்பாய்-22 (போன்: 60588)

## சங்கீத - நாடக விழா 1956

★

நிகழ்ச்சி நிரல் (D. V.)

| தேதி / நேரம் | நிகழ்ச்சி | |
|---|---|---|
| 6-1-56 வெள்ளி இரவு 7-30 மணி | ஸ்ரீ தியாகராஜ பூஜை | |
| இரவு 8 மணி | காருகுறிச்சி ஸ்ரீ அருணாசலம் & பார்ட்டி ... | நாகஸ்வரம் |
| 7-1-56 சனி மாலை 6 மணி | பம்பாய் முதன் மந்திரி கனம் மொரார்ஜி தேசாய் அவர்கள் சங்கீத விழாவைத் துவக்கி வைப்பார்கள் | |
| மாலை 6-30 மணி | அரியக்குடி ஸ்ரீ ராமானுஜ அய்யங்கார் ... | பாட்டு |
| | லால்குடி ஸ்ரீ ஜெயராமன் ... | வயலின் |
| | பாலக்காடு ஸ்ரீ மணி அய்யர் ... | மிருதங்கம் |
| 8-1-56 ஞாயிறு மாலை 6 மணி | ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி ... | பாட்டு |
| | திருவாலங்காடு ஸ்ரீ சுந்தரேச அய்யர் ... | வயலின் |
| | தஞ்சாவூர் ஸ்ரீ டி. கே. மூர்த்தி ... | மிருதங்கம் |
| | உமையாள்புரம் ஸ்ரீ கோதண்டராம அய்யர்... | கடம் |
| 9-1-56 திங்கள் இரவு 8 மணி | செம்மங்குடி ஸ்ரீ ஸ்ரீனிவாச அய்யர் ... | பாட்டு |
| | மாயூரம் ஸ்ரீ கோவிந்தராஜ பிள்ளை ... | வயலின் |
| | பாலக்காடு ஸ்ரீ மணி அய்யர் ... | மிருதங்கம் |
| | உமையாள்புரம் ஸ்ரீ கோதண்டராம அய்யர்... | கடம் |
| 10-1-56 செவ்வாய் இரவு 8 மணி | மதுரை ஸ்ரீ மணி அய்யர் ... | பாட்டு |
| | ஸ்ரீ டி. என். கிருஷ்ணன் ... | வயலின் |
| | பழனி ஸ்ரீ சுப்ரமணிய பிள்ளை ... | மிருதங்கம் |
| 11-1-56 புதன் இரவு 8 மணி | ஸ்ரீமதி கமலா, ராதா ... | பரதநாட்டியம் |
| 14-1-56 சனி மாலை 6-30 மணி | காசி ஹிந்து யுனிவர்ஸிடி வைஸ்-சான்ஸலர் டாக்டர் ஸி. பி. ராமஸ்வாமிஅய்யர் அவர்கள் நாடக விழாவைத் துவக்கி வைப்பார்கள் | |
| இரவு 7 மணி | டி.கே.எஸ். சகோதரர்கள் - ராஜராஜ சோழன் | தமிழ் நாடகம் |
| 15-1-56 ஞாயிறு இரவு 7 மணி | டி.கே.எஸ். சகோதரர்கள் - ராஜராஜ சோழன் | தமிழ் நாடகம் |
| 16-1-56 திங்கள் இரவு 8 மணி | டி.கே.எஸ். சகோதரர்கள் - எது வாழ்வு | தமிழ் நாடகம் |
| 17-1-56 செவ்வாய் இரவு 8 மணி | டி.கே.எஸ். சகோதரர்கள் - எது வாழ்வு | தமிழ் நாடகம் |
| 18-1-56 புதன் இரவு 8 மணி | டி.கே.எஸ். சகோதரர்கள் - கள்வனின் காதலி | தமிழ் நாடகம் |
| 19-1-56 வியாழன் இரவு 8 மணி | டி.கே.எஸ். சகோதரர்கள் - கள்வனின் காதலி | தமிழ் நாடகம் |

இடம்: சபா மைதானம் (கிங்ஸ் சர்க்கிள் ரயில்வே ஸ்டேஷன் சமீபம்) பம்பாய்

சீசன் டிக்கட்டுகள்: மெம்பர்களுக்கு ரூ. 100/-, 40/-, 20/-, 10/-

மெம்பரல்லாதவர்களுக்கு ரூ. 100/-, 50/-, 25/-, 15/-

# மன்னர்கள்

வட இந்தியாவில் வாழ்ந்த பழைய சமஸ்தான மன்னர்களின் ராஜ தர்பார்களைக் காண்பதற்கு நேயர்களைச் சில ஆண்டுகள் பின்னோக்கி, அதாவது இந்தியாவில் பிரிட்டிஷ் ஆட்சி நடந்து வந்த காலத்துக்கு அழைத்துச் செல்ல விரும்புகிறேன். கால வெள்ளத்தில் பின்னோக்கி யாத்திரை செய்யத் தயவுசெய்து அவரவர்கள் தங்கள் மனோரதத்தில் ஏறிக் கொண்டு கண்களைச் சற்று மூடிக் கொள்ளுங்கள்.

சுதந்திர இந்தியா நிர்மாணித்திருக்கும் பிரும்மாண்டமான அணைகள், மிகப் பெரிய கால்வாய்கள், அருவி மின்சார நிலையங்கள், அழகான சிமெண்ட் சாலைகள், புத்தம் புதிய நகரங்கள், மந்திரி சபைகள், அவர்கள் நடத்தி வரும் நல்லாட்சிகள் எல்லாம் திடீரென்று மாயமாய் மறைந்து விடுகின்றன.

முத்து மாலைகளும், ரத்தின கிரீடங்களும் அணிந்த மகாராஜாக்களும், அவர்களுடைய பட்டமகிஷிகளும், மந்திரி பிரதானிகளும், சபா மண்டபங்களும், நடன மண்டபங்களும், ரதங்களும், முத்துப் பல்லக்குகளும், குதிரை வீரர்களும், சித்திரங்களும் சிற்பங்களும் நிறைந்த அரண்மனைகளும் இவைகளைப் பார்த்து வியக்கும் ஏழை எளிய குடியான மக்களும், சோலை இழந்த எண்ணற்ற கிராமங்களும் நிறைந்து விளங்கும் அதிசய உலகத்துக்கு வந்து விட்டீர்கள்.

இதோ மாடமாளிகை கூடகோபுரங்களுடன் கூடிய பிரும்மாண்டமான அரண்மனை. அந்த அரண்மனையின் சபா மண்டபத்தில் மன்னர் பட்டு பீதாம்பரங்களும், முத்து மாலைகளும், ரத்தின கிரீடங்களும் அணிந்து கையில் வைர மணிகள் இழைத்த வாளைக் கம்பீரமாகப்

மணியம் —

பகீரதன்

பிடித்துக் கொண்டு அமர்ந்திருக்கிறார். "பட்டணப் பிரவேசம் கிளம்ப ஏற்பாடுகள் தயாராகிக் கொண்டிருக்கிறது" என்று மந்திரி அடக்க ஒடுக்கத்துடன் சொல்கிறார்.

வாத்திய கோஷங்கள் ஒலிக்கின்றன. அரண்மனையில் ஒரு பரபரப்பு. அரண்மனைக்கு வெளியில் மக்கள் கூட்டத்தில் ஒரு சலசலப்பு. அரண்மனையின் முன் வாசலில் இருந்து இரண்டு ஒட்டகங்கள் புறப்படுகின்றன.

அடாடாடா! அதன் அழகை என்னவென்று சொல்வது! அதன் முதுகுத் திவலையைச் சொல்வதா! நீண்ட கழுத்தைச் சொல்வதா! விசித்திரமான வாலைப் பற்றிக் கூறுவதா! ஈடு இணை இல்லாத அழகுடன் அல்லவா அந்த ஒட்டகங்கள் காட்சி யளிக்கின்றன! இந்த அழகுப் பிராணிக்கு அலங்காரங்கள் வேறல்லவா செய்திருக்கிறார்கள்!

இந்தப் பிராணிகளுக்குப் பின்னால் இரண்டு கம்பீரமான யானைகள். தங்க முகபடாங்களுடன் கூடிய யானைகள். அவற்றின் நீளமான தந்தங்களில்தான் எத்தனை விசித்திரமான வேலைப்பாடுகள். எல்லாம் தங்கத்தால் அல்லவா செய்யப்பட்டிருக்கின்றன.

யானைகளுக்குப் பின்னால் என்ன! கோவேறு கழுதைகளா! ஆமாம். கோவேறு கழுதைகள் பூட்டிய பீரங்கி வண்டிகள்தான். அதில் தான் எத்தனை வகை பீரங்கி வண்டிகள்!

இதற்குப் பிறகுதான் அற்புதமான காட்சி. அலங்காரம் செய்யப்பட்ட நூறு குதிரைகள் 'டாக்' 'டாக்' என்று ஓடி வருகின்றன. அந்தக் குதிரைகளின் மீது அழகழகான பல வர்ண உடைதரித்த வீரர்கள் கையில் பளபளவென்று மின்னும் வேலாயுதத்தைத் தூக்கிப் பிடித்து கிபிர்த்தபடி அமர்ந்திருக்கிறார்கள்.

குதிரைப் படைகளுக்குப் பின்னால் காலாட்படை, வரிசை வரிசையாக வருகின்றது. அவர்களுக்குப் பின்னால் அலங்கார உடைகள் தரித்த பாண்டு வாத்திய கோஷ்டிகள். இப்படிப் பலப் பல விதமான சைன்யங்களின் ஊர்வலம் ஒன்றன்பின் ஒன்றாக வந்து கொண்டே இருக்கின்றன. இந்த ஊர்வலத்துக்கு முடிவே கிடையாதோ என்று நினைக்கும் போது "இதோ மன்னர் வருகிறார்!" என்ற கோஷம் கேட்கிறது.

தங்க முகபடாமும், தங்கக் கவசமும் தரித்த பட்டத்து யானை. அதன் முதுகில் தங்கச் சிம்மாசனம். அந்தச் சிம்மாசனத்தில் மன்னர் கம்பீரமாக அமர்ந்திருக்கிறார். யானை ஆடி ஆடி நடப்பதற்கு ஏற்றவண்ணம் அவர் ஆடுவதே அழகாக இருக்கிறது. அந்த ஆட்டத்தில் அவர் அணிந்திருக்கும் முத்துக்களும், வைரங்களும், நவரத்தினங்களும் "பளீர்! பளீர்!" என்று மின்னுகின்றன.

மன்னர் அமர்ந்திருக்கும் யானைக்கு முன்னும் பின்னும் இருபுறத்திலும் பளபளவென்று மின்னும் பற்பல ஆயுதங்கள் தாங்கிய வீரர்கள் கூட்டம், மன்னர் விருதுகள் தாங்கிய மல்லர்கள் கூட்டம் வந்துகொண்டிருக்கின்றன.

வீதியின் இருபுறத்திலும் இருந்து ஏழை எளிய மக்கள், வயிறாரச் சாப்பிட முடியாத மக்கள், தங்கள் உழைப்பால் உயர்த்து ஊர்வலம் வரும் மன்னரைப் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள். "புண்ணியம் செய்தோம், மன்னர் தரிசனத்துக்கு!" என்று மக்கள் மகிழ்கின்றனர். தங்களை மறந்து அப்படி என்னும்படி மாற்றப்பட்டிருந்தார்கள் மக்கள்.

சமஸ்தான மன்னர்கள் பலருடைய ஆட்சியில் மக்கள் அடைந்த பெரிய பலன்களில் ஒன்று — ஒன்றே ஒன்று இதுதான். மன்னரின் பட்டணப் பிரவேச தரிசனம்தான்! மக்களைப் பசியும் பட்டினியும் வாட்டினாலும், உடுத்திக் கொள்ளத் துணிகளும், குடியிருக்க நல்ல குடிசைகளும் இல்லா விட்டாலும் மன்னர்களின் பட்டணப் பிரவேசத்தையாவது கண் குளிரக் கண்டு மகிழ முடிகிறதல்லவா! இதைவிட வேறு என்ன பாக்கியம் வேண்டும்!

மன்னர் பிறந்ததினம் வருகிறது. "உஷார்!" யார் யாருக்கு என்ன பட்டங்கள் கிடைக்குமோ! அதோ மன்னர் சபா மண்டபத்தில் அமர்ந்து தம்முடைய பிரதானிகளுக்கெல்லாம் கௌரவப் பட்டங்கள் வழங்குகிறார். இதோ ஒருவருக்கு அவருடைய சேவையை மெச்சி ராணுவத்தின் மிக உயர்ந்த விசேஷ பட்டம் வழங்கப்படுகிறது. இந்தப் பட்டம் வழங்கும் வைபவம் மந்திரிமார்கள், சேனைத் தலைவர்கள், இதர சமஸ்தான உயர்தர அதிகாரிகள் எல்லாரும் புடை சூழக் கோலாகலமாக நடைபெறுகிறது. சமஸ்தான மன்னரின் மாபெரும் சபை அதை ஆமோதித்து வரவேற்கிறது.

கௌரவப் பட்டம் வழங்கப்பட்டவர் யார்! அதுதான் ஆச்சரியம்! சமஸ்தான மன்னர்களின் ஆட்சியில் நடந்த, கற்பனை செய்துகாண முடியாத அதிசயம். மன்னரின் கௌரவப் பட்டத்தைப் பெற்றவர் இன்னும் அந்த சமஸ்தானத்தில் பிறக்கவே இல்லை. ஆமாம்! பிறக்காத குழந்தைக்குத்தான் மன்னர் தம் பிறந்த தின விழாவில் ராணுவ விசேஷப் பட்டம் வழங்கிக் கௌரவித்திருக்கிறார்.

இப்படிப்பட்ட உலக மகா அதிசயங்கள், சமஸ்தான மன்னர்களின் ஆட்சியிலே உண்மையாக நடந்த நிகழ்ச்சிகள். இதை எல்லாம் பெப்சு ராஜ்யத்தின் தலைநகரான பாட்டியாலாவுக்குள் பிரவேசித்ததும் கேள்விப்பட்டேன். இந்த அற்புதச் செய்திகளைக் கேள்விப்பட்ட போது கால வெள்ளத்தில் எத்தனையோ ஆண்டுகளுக்குப் பின்னால் பிரயாணம் செய்து, அந்த நாட்டின் சமஸ்தான மன்னர்கள், 'ஆட்சி' என்ற பெயரில் நடத்திய விந்தையான சமஸ்தான மன்னர்களுக்கு முன்னிலையில் இருப்பது போன்ற பிரமை தான் உண்டாயிற்று.

"இப்படியும் நடந்திருக்குமா!" என்று வியப்புடன் கேட்டேன். நம்ப முடியாத செய்திகள் என்று நான் எண்ணியதை என் குரலிலிருந்தே தெரிந்து கொண்டார் பாட்டியாலாவைச் சேர்ந்த அதிகாரி.

"இப்பொழுது கேள்விப்பட்ட செய்திகள் எல்லாம் உண்மை. இதை விட அதிசயமான சம்பவங்கள் எல்லாம் நடந்திருக்கின்றன. இவரைக் கேளுங்கள் சொல்வார்" என்று அருகில் இருந்த ஒரு வயது முதிர்ந்த மனிதரை எனக்கு அறிமுகம் செய்து வைத்தார்.

அந்தப் பெரியவர் சமஸ்தான மன்னர் குடும்பத்தைச் சேர்ந்தவர். மன்னரை விட







## சீர்திருத்தப்பட்ட தொழிற்சாலை முழு விசையுடன் இயங்குகிறது

ஆம்கோஸ் 1933 லிருந்தே, இந்தியாவில் முதன்முதலாக விதவிதமான பாட்டரி உற்பத்தி வேலையை ஆரம்பித்து அநேக அம்சங்களில் முதன்மை வகிக்கின்றனர். யுத்தகாலத்திற்கு முன்பே மோட்டார் பாட்டரிகளை ஏராளமாகத் தயாரித்து விற்பனை செய்தது மட்டுமின்றி அயல் நாட்டுச் சரக்குகளின் பயங்கரப் போட்டிக்கும் ஈடு கொடுக்கும்படியான கீர்த்தியை சம்பாதித்த முதல் ஸ்தாபனம் இதுவே. முதன்முதலாக இந்தியாவில் ரயில்வேக்களுக்குத் தேவையான ரயில் வண்டி விளக்குகளுக்கான பாட்டரியைத் தயாரித்து சப்ளை செய்த ஸ்தாபனம் இதுவே.




**உறுதிப்பாட்டிற்குகந்தது ஆம்கோஸ்**

டெலிபோன் ஸெல்களைத் தயாரித்ததில் முதல்வர்கள். மின் சக்தி உற்பத்திசாலைகளில் அவசர காலத்திற்கான ஸ்டேஷனரி பாட்டரிகளைத் தயாரித்ததிலும் முதல்வர்கள்—இவை யனைத்தும் பதினேழு ஆண்டுகளுக்கு முன்பே ஆரம்பிக்கப்பட்டவை.

திட்டமிட்டுத் தொகுக்கப்பட்ட விஸ்தரிப்பு ஏற்பாடுகளின் கீழ் ஆம்கோஸ் இப்பொழுது அவர்கள் இந்தியாவில் தயாரிக்கத் துவங்கிய ஒவ்வொரு வகை பாட்டரி சாதனங்களையும் பிரம்மாண்டமான அளவில் உற்பத்தி செய்ய ஆரம்பித்துள்ளனர். இது மாத்திரமல்ல, ஆம்கோஸ் இப்போதும், எதிர்காலத்திலும் ஏற்படும் ஒவ்வொரு அவசியமான உபயோகத்திற்கும் தகுதி வாய்ந்த பாட்டரியைத் தயாரித்து வருவர்.

**ஆம்கோ பாட்டரீஸ் லிமிடெட், பங்களூர்.**

APP/1/MAC

தென் இந்தியாவுக்கு விநியோகஸ்தர்கள் :
அடிஸன் & கம்பெனி, லிமிடெட், மதராஸ் – பெங்களூர்

அதிர்ஷ்டசாலி என்பது அவர் கூறிய சம்பவங்களில் இருந்து தெரிந்து கொள்ள முடிந்தது.

திடீரென்று ஒரு நாள் நாலு வயதுச் சிறுவனுக்கு ஆயிரம் ரூபாய் பணம் வந்தது. வந்த பணத்தை யாராவது வேண்டாம் என்பார்களா! சிறுவனின் தந்தை பணத்தைப் பெற்றுக் கொண்டார். கூடவே நாலு வயது நிரம்பிய அந்தச் சிறுவன் சமஸ்தானத்தில் முக்கிய அதிகாரியாக நியமிக்கப்பட்டிருக்கிறான் என்று சமஸ்தான மன்னரின் உத்தரவும் இருந்தது.

மாதம் தவறாமல் சிறுவனுக்குச் சம்பளம் வந்து கொண்டிருந்தது. பையன் சுக சௌகரியங்களுடன் வளர்ந்து வந்தான். இருபது வருடங்கள் ஓடி மறைந்தன. சிறுவன் வாலிபனானான். இருபத்து நாலு வயது நிரம்பிய இளங் காளையானான்.

ஒருநாள் அந்த வாலிபன் சமஸ்தானத்துக் காரியாலயத்துக்குச் சென்றான். காரியாலயத் தலைமை அதிகாரியைப் பார்த்தான். "தனக்கு ஒரு காரியாலயமும், தான் என்ன வேலை செய்ய வேண்டும் என்பதற்கான விவரமும் உடனே தரவேண்டும்" என்றான்.

அதிகாரிக்கு ஒன்றும் புரியவில்லை. "உனக்கு ஒரு காரியாலயமா! நீ ஏன் வேலை செய்ய வேண்டும்!" என்று கேட்டார்.

வாலிபனுக்குக் கோபம் வந்து விட்டது. "எனக்கு இருபத்து நாலு வயது ஆகிறது. இருபது வருஷங்களாக இந்த சமஸ்தானத்தில் மாதாமாதம் ஆயிரம் ரூபாய் சம்பளம் வாங்கி வருகிறேன். நான் ஏன் வேலை செய்ய வேண்டும் என்று கேட்கிறீர்!" என்று கர்ஜித்தான்.

இந்த விசித்திரச் செய்தியைக் கேட்டதும் அதிகாரி திடுக்கிட்டார். அந்த சமஸ்தானம் அப்படியே ஆச்சரியத்தில் மூழ்கி விட்டது!!

இவ்வாறு நாலு வயதுப் பையனுக்கு உயர்தர அதிகாரிப் பதவியும், பிறக்காத குழந்தைக்கு மிக உயர்ந்த ராணுவ விசேஷ விருதும் வழங்கும் அளவில் சில சமஸ்தான மன்னர்களின் ஆட்சி வட இந்தியாவில் நடந்து வந்திருக்கிறது.

நாடு சுதந்திரம் பெற்றவுடன் இந்த சமஸ்தான ஊழல்கள் முதலில் களையப்பட்டன. அதற்கு வேண்டிய முயற்சிகளைத் தீவிரமாக எடுத்துக் கொண்டார்கள். அதன் விளைவாக ஏற்பட்டதுதான் பெப்சு ராஜ்யம்.

## பெப்சு ராஜ்யம்

பெப்சு ராஜ்ய அமைப்பைப் பற்றித் தெரிந்து கொள்வதுடன் அந்த நாட்டு அரசியலையும் கொஞ்சம் தெரிந்து கொள்வோம். சுதந்திரம் பெற்றவுடன் பாரத சர்க்கார் எவ்வளவு கஷ்டங்களைச் சமாளிக்க வேண்டியிருந்தது, இருக்கிறது என்பதை பெப்சுவின் அரசியலை ஒருவாறு தெரிந்து கொண்டால் தான் புரிந்து கொள்ள முடியும். ஆமாம், நமது நாட்டு அரசியலைப்பற்றி நாம் தெரிந்து கொள்ளத்தானே வேண்டும்!

பாட்டியாலா, நாபா, ஜிந்த், கபூர்தாலா, மாலேர்கோட்லா, பரித்கோட், நாலாகட், கால்ஸியா ஆகிய எட்டு சமஸ்தானங்களை ஒன்றாக இணைத்து உண்டாக்கிய "பாட்டியாலா கிழக்குப் பஞ்சாப் யூனியன்" தான் பெப்சு ராஜ்யம். அதாவது "பாட்டியாலா அண்ட் ஈஸ்ட் பஞ்சாப் ஸ்டேட் யூனியன்" என்ற ஆங்கிலப் பதத்தில் உள்ள ஒவ்வொரு வார்த்தையின் முதல் எழுத்தையும் எடுத்துப் "பெப்சு" என்று பெயர் வைத்திருக்கிறார்கள்.

1948-ம் ஆண்டு ஜூலை மாதம் பதினைந்தாம் தேதி பெப்சு ராஜ்யம் அமைக்கப்பட்ட விவரம் நேயர்கள் அறிந்ததே. பத்தாயிரத்து நூற்றுப்பத்து சதுர மைல் விஸ்தீரணமுள்ள பெப்சு ராஜ்யம் ஐந்து பகுதிகளாகப் பிரிந்து பஞ்சாப் ராஜ்யத்துக்குள் இருக்கிறது.

முப்பத்தைந்து லட்சம் ஜனத்தொகையுள்ள இந்த ராஜ்யத்தில் சீக்கியர்கள் அதிகம். இந்துக்களும் பாதிக்குக் குறைவாக இருக்கிறார்கள். பஞ்சாபைப் போலவே பெப்சுவிலும் இரண்டு பாஷைகள், அதாவது இந்தியும் பஞ்சாபியும் பேசுகிறார்கள். பெப்சு ராஜ்யத்தின் எட்டு ஜில்லாக்களில் ஐந்து ஜில்லாக்களில் பஞ்சாபியும், மூன்று ஜில்லாக்களில் இந்தியும் பேசுகிறார்கள் என்பதை நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். இருந்தாலும் பொதுவாகப் பெப்சுவில் உள்ள எல்லாருக்குமே இரண்டு பாஷைகளும் தெரிகின்றன.

பெப்சுவில் உள்ள எட்டு சமஸ்தானங்களும் ஒரே அளவு நிலப்பரப்பை உடையன அல்ல. பாட்டியாலாதான் பெப்சுவில் மிகப் பெரிய சமஸ்தானம். சுமார் ஆறாயிரம் சதுர மைல் விஸ்தீரணம் உடையது. மாலேர் கோட்லா நூற்று அறுபத்து ஐந்து சதுர மைல் விஸ்தீரணம் உடையது.

மாலேர் கோட்லா சமஸ்தானத்தை அரசாண்டு வந்த மன்னர்கள் ஆப்கான் லோடி ராஜ வம்சத்தைச் சேர்ந்தவர்கள். நாலாகட் சமஸ்தான மன்னர்கள் சந்தேல் ரஜபுத்ர வம்சத்தினர். மற்ற ஆறு சமஸ்தான மன்னர்களும் சீக்கியர்கள்தான்.

இந்த சமஸ்தானங்களில் நிலைபெற்று வந்த ஆட்சி முறையைப் பற்றித்தான் முதலிலேயே புரிந்து கொண்டு விட்டோமே!

இந்த எட்டு சமஸ்தானங்களையும் ஒன்று சேர்த்து ஒரு ராஜ்யமாகச் செய்வதற்குள் பாரத சர்க்காருக்குப் போதும் போதும் என்று ஆகிவிட்டது.

பிரிட்டிஷார் இந்தியாவை விட்டு வெளியேற ஆரம்பித்ததும் இந்த சமஸ்தான மன்னர்கள் தங்கள் இஷ்டத்துக்குச் சுதந்திரக் கொடி பிடிக்கலாம் என்று தான் நினைத்து வந்தார்கள். ஹைதராபாத் சமஸ்தானமும், திருவனந்தபுரமும் இந்திய சுதந்திரத்துக்கு எதிராகச் சுதந்திரக் கொடி பிடித்ததல்லவா? அதேபோல்தான் எட்டு சமஸ்தான மன்னர்களும் சுதந்திரக் கொடி பிடிக்கப் பார்த்தார்கள். அதற்கு வேண்டிய பலமான திட்டங்களும் போட்டு வைத்திருந்தார்கள்.

இதையெல்லாம் நன்றாகத் தெரிந்து கொண்டிருந்த நமது தலைவர்கள் அவர்களை ஆரம்பத்திலேயே மட்டம் தட்டுவதற்குத் திட்டம் வகுத்தார்கள். பெப்சு ராஜ்யத்தை அமைத்து, அதன் ஆரம்ப விழாவில் சமஸ்தான இணைப்பு வீரர் சர்தார் பட்டேல் நிகழ்த்திய சொற்பொழிவை இப்பொழுது நினைவுபடுத்திக் கொண்டால் நமது தலைவர்கள் எவ்வளவு முன்யோசனையுடனும் அஞ்சா நெஞ்சத்துடனும் காரியங்களைச் செய்திருக்கிறார்கள் என்பதை ஒருவாறு புரிந்து கொள்ளலாம்.

சமஸ்தான மன்னர்களையும் அவர்கள் ஆலோசகர்களையும் ஒன்று சேர்த்து உட்கார வைத்து

ஆணித்தரமாக, அழுத்தம் திருத்தமாகச் சர்தார் பட்டேல் சொன்னார்:

"சமஸ்தானத்தின் தற்காப்பையும், ஒற்றுமையையும் குலைத்து விடலாம் என்று யாராவது கனவு கண்டால் அது வெறும் கனவாகத்தான் முடியும். இன்னும் ஒரு வருஷத்துக்குள் அதாவது 1948ம் ஆண்டுக்குள்ளாகவே மத்திய சர்க்கார் கவிழ்ந்து விடும். அதைக் கவிழ்ப்பதற்கு வேண்டிய சூழ்ச்சிகளைச் செய்துவிடலாம் என்று ஆரூடம் சொல்லும் சோதிடர்களை சமஸ்தானத் தலைவர்கள் நம்புகிறார்கள். மத்திய சர்க்கார் கவிழ்ந்தால் தில்லிக்குப் படையெடுக்கலாம் என்று நினைக்கிறார்கள். இன்னும் சிலர் இந்த நாட்டில் சமஸ்தானங்கள் அழியாமல் இருப்பதற்கு வேண்டிய நடவடிக்கைகளை எடுக்க யோசனை கூறும் சன்னியாசிகளை நம்புகிறார்கள். மத்திய சர்க்கார் ஹைதராபாத்மீது போலீஸ் நடவடிக்கை எடுக்கும் சமயம் பார்த்துத் தில்லிக்குப் படையெடுக்கலாம் என்று சிலர் கருதுகிறார்கள். அவர்கள் எல்லாருக்கும் இப்பொழுதே சொல்லி விடுகிறேன். வீணாகக் கஷ்டத்தில் மாட்டிக் கொள்ளாதீர்கள். உங்களுக்கு நாங்கள் அளிக்க விரும்பும் கௌரவத்தை அழித்துக் கொள்ள முயலாதீர்கள்.

"பெற்ற சுதந்திரத்தை சமஸ்தான மன்னர்களிடம் இழப்பதற்கல்ல நாங்கள் ராஜ்யப் பொறுப்பை ஏற்றுக் கொண்டது. பலம் நிறைந்த சர்க்காரை அமைப்பதற்கு, நாமும் நமது சந்ததிகளும் பெருமைப்படும்படியான ராஜ்யத்தை உருவாக்குவதற்குத் தீர்மானித்து விட்டோம். அதைக் காரியத்தில் நிறைவேற்றி விட்டுத்தான் தூங்குவோம்."

சமஸ்தான மன்னர்களின் முன்னிலையில் பட்டேல் சொன்னதை உண்மையாகவே நிறைவேற்றிக் காட்டினார். ஆனாலும் அதை அவ்வளவு சுலபமாகச் செய்ய முடியவில்லை என்பதை அறிந்து கொள்ள வேண்டும். பெப்சுவில் நிலையான மந்திரிசபை அமைக்க முடியவில்லை. முதல் மூன்று வருஷங்களில் மூன்று மந்திரி சபைகள் இருந்தன. கவர்னரின் யோசனைப்படி இரண்டு மந்திரி சபைகளும், கம்யூனிஸ்டு கட்சியின் ஆதரவைப் பெற்ற அகாலி மந்திரி சபையும் இருந்தன. 1951-ம் ஆண்டு மக்கள் ஆட்சிக்கு அடிகோலப்பட்டது.

பெப்சுவில் 1952-ம் ஆண்டு நடந்த பொது ஜனத் தேர்தலிலும் நிலையான சர்க்கார் அமைப்பதற்கு முடியாமல் போய் விட்டது. ஆகவே, 1953-ம் ஆண்டு ஜனாதிபதியின் நேரான ஆட்சியில் இருந்தது பெப்சு ராஜ்யம். 1954-ம் ஆண்டு மீண்டும் பொதுத்தேர்தல் ஏற்பட்டது. பெப்சு ராஜ்ய சட்டசபையின் மொத்த அங்கத்தினர்கள் அறுபது பேர். அதில் முப்பத்தெட்டு பேர் காங்கிரஸ் அங்கத்தினராக வெற்றி பெற்றனர். பிறகுதான் ஜனநாயக முறையில் தேர்ந்தெடுக்கப்பட்ட சட்ட சபை அங்கத்தினர்கள் கொண்ட மக்களின் மந்திரி சபை பெப்சுவில் ஏற்பட்டது. சுதந்திரத்துக்குப் பிறகு இப்பொழுது பெப்சுவில் இருக்கும் மந்திரி சபை ஒன்பதாவது மந்திரிசபை என்றால் அங்கு அரசியலில் எவ்வளவு நிலு

# ஜம்மியின் லிவர்க்யூர்

குழந்தைகளின் ஈரல், குலைக்கட்டிகளுக்கு



## பிரதி மாதாந்திர விஜயம்

நோயாளிகளின் சௌகரியத்தை முன்னிட்டு எமது டாக்டர் ஜேம்க் குறித்த ஊர்களுக்கு அதனதன் எதிரே குறித்த தேதிகளில் பிரதி மாதமும் விஜயம் செய்வதால் அவரிடம் ஆலோசனை பெறலாம்.

○●○

ஆலோசனை நேரம் :

காலை 9 - லிருந்து 11 மணி வரை ; மாலை 3 - லிருந்து 5 மணி வரை

| இடம் | தேதி | விலாசம் |
|---|---|---|
| கரூர் | 1 காலை 10½-12 | தி செண்ட்ரல் மெடிகல் ஸ்டோர்ஸ் |
| சேலம் | 2 காலை & மாலை | தி சேலம் மெடிகல் சப்ளைஸ் & பார்மஸி லிமிடெட் |
| ஈரோடு | 3 காலை 10½-12 | ஸ்ரீ கிருஷ்ணா & கோ., ஜெனரல் மெர்ச்சண்ட்ஸ் |
| திருப்பூர் | 3 மாலை | ஆர். எஸ். வாசன் & கம்பெனி, கெமிஸ்ட்ஸ் |
| கோயமுத்தூர் | 4 காலை & மாலை | ஈஸ்வர் & கம்பெனி, கெமிஸ்ட்ஸ், ராஜா தெரு |
| பாலக்காடு | 5 காலை | நாதம் & கம்பெனி, கெமிஸ்ட்ஸ் |
| திண்டுக்கல் | 6 காலை | சி. ஆறுமுகம் பிள்ளை & சன்ஸ், ஜெனரல் மெர்ச் [சன்ட்ஸ் |
| பெரியகுளம் | 6 மாலை 2½-4½ | யுனைடெட் மெடிகல் ஸ்டோர்ஸ், மூனிலக்கு வீதி |
| மதுரை | 7 & 8 காலை & மாலை | டி. என். ஸி. நாகலிங்கம் பிள்ளை & சன்ஸ், வடக்கு சித்திரைத் தெரு |
| கோவில்பட்டி | 9 காலை 10½-12 | தனலக்ஷ்மி மெடிகல் மார்ட், கெமிஸ்ட்ஸ் |
| தூத்துக்குடி | 9 மாலை | தூத்துக்குடி மெடிகல் ஸ்டோர்ஸ் |
| திருநெல்வேலி ஜங். | 10 காலை & மாலை | சந்திர விலாஸ் ஹோட்டல் |
| ,, | 11 காலை மட்டும் | திருநெல்வேலி ஜங்ஷன் |
| ஸ்ரீவைகுண்டம் | 11 மாலை | கோமதிநாயகம் பிள்ளை, மெடிகல் ஷாப் |
| அம்பாசமுத்திரம் | 12 காலை | கோமதி மெடிகல் ஸ்டோர்ஸ் |
| தென்காசி | 12 மாலை | கிருஷ்ணா & கம்பெனி, மெடிகல் ஸ்டோர்ஸ் |
| திருவனந்தபுரம் | 13 காலை & மாலை | எம். வி. கணபதி ஐயர் & சன்ஸ், ஆத்தகுளங்கரை |
| ராஜபாளையம் | 14 காலை | வி. எஸ். திருப்பதி ராஜா, ஜெனரல் மெர்ச்சன்ட்ஸ் |
| காரைக்குடி | 15 காலை & மாலை | ஏ. வி & சன்ஸ், டிராவலர்ஸ் ரெஸ்ட் ஹவுஸ் |
| சிவகங்கை | 16 காலை | மீனாக்ஷி ஸ்டோர்ஸ், கெமிஸ்ட்ஸ் & டிரக்கிஸ்ட்ஸ் |
| புதுக்கோட்டை | 16 மாலை | வசந்தா லாட்ஜ் |
| தஞ்சாவூர் | 17 காலை & மாலை | ராஜா சத்திரம் |
| பட்டுக்கோட்டை | 18 காலை | விசாரிக்குமிடம்:—முருகன் மெடிகல் ஹால், அல்லது பட்டுக்கோட்டை டிரக் ஸ்டோர்ஸ் |
| திருத்துறைப்பூண்டி | 18 மாலை | ஸ்ரீ டி. வி. சந்திரசேகரம் பிள்ளை, மெடிகல் ஷாப் |

(தொடர்ச்சி எதிர் பக்கம் பார்க்க)

மல்லுகள் நடைபெற்றிருக்கும் என்பதைச் சற்றுக் கற்பனை செய்து பாருங்கள்.

பெப்சு ராஜ்யத்தின் நிலைமை இப்பொழுது எவ்வளவோ முன்னேறி யிருக்கிறது. மத்திய சர்க்கார் பெப்சு மந்திரி சபைக்காக விசேஷ ஆலோசகரை அனுப்பி மந்திரி சபை நிலையாக இருப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தனர். இப்பொழுது பெப்சுவில் மத்திய சர்க்காரின் ஆலோசகர் இல்லை. அதாவது பெப்சுவில் நிலையான மந்திரி சபை இருப்பதற்கு வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டு விட்டது.

பெப்சு ராஜ்யத்தில் நிலையான மந்திரி சபை ஏற்படுவதற்கு ஏன் இவ்வளவு சங்கடங்கள் ஏற்பட்டன!

முதல் காரணம் அங்கு சீக்கியர்கள் அதிகம். ஆகவே சீக்கிஸ்தானுக்கு ஆதரவு தரும் முறையில் குழப்பங்கள் ஏற்படுகின்றன. இப்பொழுது பெப்சுவில் முதல் மந்திரியாக இருப்பவர் விருஷபான் என்னும் இந்துதான். சீக்கியர்களின் மனத்துக்கு ஏற்ற வண்ணம் அறிவுடன் நடக்கும் பேராற்றல் படைத்தவராக இருக்கிறார். இருந்தாலும் அவர் நிலைமையும் ஆபத்தானதுதான்!

இரண்டாவது காரணம் காங்கிரஸின் பெயரால் வந்திருக்கும் சட்டசபை அங்கத்தினர்கள் பெரும்பாலோர் ஜமீன்தார்கள். உண்மையான தேசபக்தி இல்லாதவர்கள். மக்களிடம் அன்பில்லாதவர்கள். முப்பத்தெட்டு காங்கிரஸ் அங்கத்தினர்களில் பதினைந்து பேர் ஜமீன்தார்கள். இவர்களால் காங்கிரஸின் பலமும், செல்வாக்கும் கலகலத்து வருகின்றன.

இந்த விவரங்களை எல்லாம் பெப்சு முதன் மந்திரி விருஷபான் மூலம் தெரிந்து கொண்டோம். அவர் அகில இந்தியப் பத்திரிகையாளர்களுக்கு அளித்த பேட்டியின்போது அவரிடம் கேட்டுப் புரிந்து கொண்டோம்.

பழைய சமஸ்தான மன்னர்கள் மூன்று பேர் சட்டசபை அங்கத்தினர்களாக இருக்கிறார்கள். இவர்களுக்கெல்லாம் சர்க்கார் அதிகாரிகளுக்கு மத்தியில் நல்ல செல்வாக்கு இருக்கிறது. அதனால் நல்ல காரியங்களை வேகமாக நடக்க விடாமல் என்னென்ன தடைகள் செய்யலாமோ அவைகள் எல்லாவற்றையும் செய்து வரும் அதிசயத்தையும் பார்த்தோம்.

பெப்சுவில் ஜமீன்தாரி ஒழிப்புச் சட்டம் கொண்டு வந்திருக்கிறார்கள். ஆனால் சட்டம் வெறும் சட்டமாக வெள்ளைக் காகிதத்தில் தான் இருக்கிறது. நடைமுறையில் அமுலாக்கப்படவில்லை. அமுலாக்க முடியாமல் சட்டசபையின் செல்வாக்கை உபயோகித்து, சர்க்கார் அதிகாரிகளைத் தங்கள் கைக்குள்ளே போட்டுக் கொண்டிருக்கிறார்கள் மன்னர்களும் ஜமீன்தார்களும் என்று சொல்லப் படுகிறது.

"சுதந்திர இந்தியாவிலா இப்படி நடக்கிறது" என்று ஆச்சரியப்படுகிறீர்களா! அப்படியென்றால் நமது பாரத சர்க்கார் எவ்வளவு சர்வ ஜாக்கிரதையாகக் காரியங்கள் செய்து வரவேண்டியிருக்கிறது என்பதைக் கொஞ்சம் சிந்தித்துப் பாருங்கள்.

இதுவரை கேள்விப்பட்ட செய்திகளையும் தோற்கடித்த இன்னும் சில சம்பவங்களையும் அடுத்த இதழில் காண்போம். (தொடரும்)




"சௌகார்" நக்ஷத்திரம் ஸ்ரீமதி
ஜானகியின் பாராட்டு:
"ரெமி அழகு சாதனங்
களுக்கு ஈடு எதுவுமில்லை."

S. Janaki

[ இந்தக் கதையின் ஆசிரியர் ஸ்ரீ டி. தாஸ், டில்லி மத்திய அரசாங்கத்தின் 'கம்யூனிகேஷன்ஸ்' இலாகாவின் கூட்டுக் காரியதரிசி. ஐ. ஸி. எஸ். அதிகாரி. கடல் கடந்து சென்று மேனாட்டு நாகரிகங்களை யெல்லாம் நேருக்கு நேராகப் பார்த்தவர். என்றாலும் அவருடைய உள்ளம் பாரத நாகரிகத்தில் தோய்ந்தது என்பது இந்தக் கதையிலே புலனாகும்.

ஸ்ரீ தாஸ் வங்காள மொழியிலும் ஆங்கிலத்திலும் பல கதை கட்டுரைகள் எழுதியவர். அகில இந்திய வங்காளி இலக்கிய மகாநாட்டின் தலைவர் அவர். சென்னையில் இந்த வாரம் நடக்கும் வங்காளி இலக்கிய மகாநாட்டை யொட்டி, அவர் எழுதியுள்ள சிறு கதைகளில் ஒன்றின் தமிழ் மொழி பெயர்ப்பைக் கீழே மகிழ்ச்சியோடு வெளியிடுகிறோம். — ஆசிரியர் ]

# இதய ரேகை

பொழுதுபோக்காகவும் சரி, தொழிலாகவும் சரி எனக்குக் கை ரேகை பார்க்கத் தெரியாது. ஆயினும் ஒரு நாள் நான் ரேகை பார்த்துக் குறி சொல்லும்படி ஆகிவிட்டது. அன்று அப்படி ரேகை பார்க்க வேண்டுமென்று நான் உத்தேசிக்கவே இல்லை. ஆனால் பலர் மன்றாடிக் கேட்டுக் கொண்டால் நாம் மனமிரங்க வேண்டாமா! ஆசையோடு ஒருவர் கை நீட்டும்போது அதைப் பிடித்துப் பார்ப்பதுகூட ஒரு சங்கடமாகுமா! பிறரது அதிர்ஷ்டத்தைக் கண்டு பிடித்துக் கூற வேண்டி வந்தபோது எனக்கு அதிர்ஷ்டம் கூடவே இருந்தது; இல்லையானால் என் குட்டு வெளியாகி யிருக்கும். அதிலும் முக்கியமாக, குறி சொல்லுவதையே பரம்பரைத் தொழிலாகக் கொண்ட ஜிப்ஸி வர்க்கத்தாரில் ஒருவனது கையைப் பார்த்துக் கதை அளக்கும்போது நான் போலிக் குறிகாரன் என்பது தெளிவாகத் தெரிந்து போயிருக்கும். என் அதிர்ஷ்டம், அன்று என் குட்டு வெளியாகவில்லை என்பதோடு, அந்த ஜிப்ஸியின் பூர்வோத்தர வாழ்க்கை முழுவதும் வெட்டவெளிச்சமாகி விட்டது.

அன்று பலரின் நிர்ப்பந்தத்தால் நான் குறிகாரனாக ஆக நேர்ந்தபோது, அவர்களின் கடந்த கால வாழ்க்கையைப் பற்றி நான் பலவாறாகக் கயிறு திரித்துக் கதை கட்டிக்கொண்டிருந்தேன். இந்தப் பொழுதுபோக்கில் நான் ஈடுபட்டிருக்கையில் ஒரு மனித ஜீவனின் சோக மயமான நிஜ வரலாற்றை அறிய நேரும் என்று நான் சிறிதுகூட எதிர்பார்க்கவில்லை.

ஸ்காட்லாந்துக் கரையோரத்திலுள்ள ஹெப்ரிடிஸ் தீவுகளுக்கு நான் லைர் பார்க்கச் சென்ற சமயத்தில்தான் இந்தச் சம்பவம் நேர்ந்தது.



தேபேஷ் தாஸ் ஐ. ஸி. எஸ்.

அத் தீவுகளுக்கு விஜயம் செய்த இரண்டாவது இந்தியன் நான்தானாம். "பட்டு வாங்கலையோ பட்டு" என்று தெருத் தெருவாய்ச் சுற்றி வியாபாரம் செய்த இந்திய நாடோடி வியாபாரி ஒருவன் எனக்கு முன் அங்கே வந்திருந்ததாகக் கேள்வி. நானும்தான் ஒரு நாடோடி. ஹெப்ரிடிஸ் தீவுகளின் ஏகாந்தமான அழகில் ஈடுபட்டு மனத்தைப் பறிகொடுக்க வந்த தேசாந்திரிதான் நான்.

இந்தியாவில் மாணவனாக இருந்தபோது என் அமைதியான வாழ்க்கையில் நான் சிறிதும் நினைத்துக்கூடப் பார்த்திராத எத்தனையோ புதுமைகளைத் தினம் தினம் பார்க்க வாய்ப்புக் கிடைத்த தேசாந்திரி வாழ்க்கை எனக்கு அமைந்தது. இருபது மைல் தூரம் கால் கடுக்க நடந்து களைத்துப் போன நான் விக் நகரிலுள்ள இளைஞர் விடுதியை வந்தடைந்தேன். அந்த விடுதி இருந்த வீடு சிற்றடக்கமான ஒரு அழகிய பங்களா. அங்கே விருந்தாளிகள் பொது அறையில் நாடக அரங்கு போன்ற ஒரு "பால்கனி" இருந்தது. அது எனக்கு வியப்பாக இருந்தது. அது என்ன என்று பார்க்க வேண்டுமென்று மனத்தில் ஆவலும் பிறந்தது. அந்த பால்கனியில் ஸ்காட்லாந்து மலைவாசிகள் அணியும் "கில்ட்" பாவாடை தரித்திருந்த ஒருவன் நின்றுகொண்டிருந்தான். அவனைப் பார்த்ததும் என்னை அறியாமலே எனக்குச் சிரிப்பும் வந்தது.

"அது யார்!" என்று யாரோ என்னிடம் மெதுவாகக் கேட்டார்கள்.

"ஸ்காட்லாந்து மலை ஜாதியாரின் பரம்பரைச் சரித்திரச் சுருக்கம் மனித உருவெடுத்து வந்திருக்கிறது" என்று நான் விகடமாகப் பதில் கூறினேன்.

நான் மெதுவாகத்தான் பதில் சொன்னேன். ஆனா



ஆம், அது அருகில் நின்ற அவர் காதில் கேட்டுவிட்டது. அவர் பக்கென்று சிரித்துவிட்டார்; "இல்லை ஐயா, இல்லை. போர்ட்வி நகரத்தில் நடைபெறும் ஆட்டப் போட்டிகளில் மலைவாசிகளின் விளையாட்டில் பங்கு கொள்வதற்காக நான் இங்கே வந்திருக்கிறேன்" என்று அவர் எனக்கு விஷயத்தை விளக்கி வைத்தார்.

நான் என் குழப்பத்தைச் சமாளித்துக் கொண்டு அவரை நெருங்கினேன். "பேஷ், பேஷ்; அப்படியானால் நீங்கள்தான் இவ்வருஷத்துச் சாம்பியன்" என்றேன்.

அவர் சிறிது வெட்கத்துடன் என்னைப் பார்த்துச் சிரித்து விட்டுக் கேட்டார்: "அதெப்படி ஜார்ஜ்!"

எனக்கா பதில் சொல்லத் தெரியாது! "நண்பா, உன் மூதாதைகள் ராபர்ட் ப்ரூஸ் மன்னனுடன் சேர்ந்து போரிட்டிருப்பார்கள்; இங்கிலாந்து மன்னன் சார்லஸ் முடியும் தலையும் இழந்த பின் நடந்த போர்களில் இளவரசன் கட்சியிலும் சேர்ந்து போராடித் தப்பி ஓடியிருப்பார்கள்; அவர்கள் சந்ததியில் வந்த நீ ஓட்டப் பந்தயத்தில் சாம்பியனாக இல்லாமலிருக்க முடியுமா! உன் பூர்வகால சரித்திரத்தைக் கவனித்து உன் எதிர்காலத்துக்குக் குறி சொன்னேன். நான் இந்தியன் என்பது உனக்குத் தெரியாதோ!" என்றேன்.

இவ்வளவு சொன்னதுதான் தாமதம், அந்த அறையிலிருந்த அவ்வளவு பேரும் என்னைச் சூழ்ந்து கொண்டார்கள். நான் அவர்கள் பாராட்டும் தெய்வமாகி விட்டேன்.

நானும் சம்பிரமமாக என் இராச் சாப்பாட்டை முடித்தேன். வேக வைத்த உருளைக் கிழங்கும், முட்டையும் ரொட்டியும் வெண்ணெயும்தான் சாப்பாடு. ஆகாரத்தை முடித்துக் கொண்டு சாவதானமாக ஒரு இடத்தில் வந்து அமர்ந்தேன். ஏதேதோ சிந்தனையில் என் மனம் சஞ்சரிக்கலாயிற்று.

அங்கே கூடியிருந்த பிரிட்டிஷ் இளைஞர்கள் நான் யோக நிஷ்டையில் இருப்பதாகவே கருதினார்கள். எல்லாரும் என்னை அரைக் கண் பார்வை போட்டு ஊன்றிக் கவனித்துக் கொண்டிருந்தார்கள்.

சந்தர்ப்பத்தைச் சமாளிக்க எனக்கா தெரியாது! உடனே ஒரு கண்ணை மூடி ஒரு கண்ணைத் திறந்து ஒரு கையை அபய ஹஸ்த முத்திரையில் பிடித்தேன். அவ்வளவுதான். எல்லாரும் அப்படியே அசந்து விட்டார்கள்.

இந்த அபூர்வ வரந்தரும் காட்சியில் ஒரே ஒரு தவறுதான் இருந்தது. அந்த பக்தர்கள் எல்லாரும் சாஷ்டாங்கமாய் என் காலடியில் விழுந்து வரங்களைக் கோரவில்லை.

அதற்கு மாறாக, கூட்டத்திலிருந்த ஒரு பெண் தன் கையை விரித்து நீட்டிக்கொண்டே என் முன் வந்தாள். என்ன அகம்பாவம் அவளுக்கு! "என் கையைப் பார்த்து ஜோஸ்யம் சொல்லுவீர்களா!" என்று கேட்டாள்.

"என்ன தர்மசங்கடம் இது" என்று நான் யோசித்தேன். கை ரேகை சாஸ்திரத்தைப் பற்றி எனக்கு அதிகமாக ஒன்றும் தெரியவும் செய்யாது. ஏதோ கீரியோவின் ஒன்றிரண்டு புஸ்தகங்கள் மாத்திரம் படித்திருக்கிறேன்; அவை எல்லாரும் சகஜமாக வைத்திருப்பவைதான். எனவே எனக்கு ரேகை சாஸ்திரம் தெரியாது என்று கூறினேன். அவள் விடுபவளாக இல்லை. அவள் தன் சாமர்த்தியத்தை எல்லாம் உபயோகித்து அழகொழுகப் பேசினாள். "தெரியவே தெரியாதா! இந்தியர்களுக்கு மந்திர தந்திரங்கள் ஜோஸ்யம் எல்லாம் தெரியுமே. எல்லா இந்தியர்களும் பாம்போடு விளையாடுவார்களே; எல்லாரும் கை ரேகை பார்த்துக் குறி சொல்லுவார்களே" என்றாள்.

நான் என் மனத்தில் உள்ள வெறுப்பைக் காட்டாமல் நயமாகப் பதில் சொன்னேன். "அதெல்லாம் நீங்களாகக் கற்பனை செய்து கொள்வதுதான். எங்களில் பாம்பாட்டிகளும் உண்டு, கை ரேகை பார்ப்பவர்களும் உண்டு; ஆனால் அவர்கள் ஒரு சிலர்தான். அதோடு கூட, நான் அவர்களில் ஒருவனும் அல்ல. நான் உங்களைப் போல் வெறும் மாணவன்தான்; சாமானிய மனிதன்தான்" என்றேன்.

நான் சொன்ன சாக்குப் போக்குகளை எல்லாம் அவர்கள் ஏற்றுக் கொள்ளவில்லை. எல்லாரும் அவள் பக்கமாகவே பேசினார்கள்; அதோடு, தங்கள் கைகளையும் பார்த்துக் குறி சொல்லச் சொன்னார்கள்.

நீல விழியும் சிவந்த நிறமும் படைத்த பெண்மணி ஒருத்தி மற்ற எல்லாரையும் விட என்னிடம் அதிக உறவு கொண்டாடி என்னை ஜார்ஜ் என்று பெயரிட்டு அழைப்பதற்குத் தொடங்கினாள்.

அவள் மன்றாடிக் கேட்டதை மறுப்பது கஷ்டமாக இருந்தது. "ஜார்ஜ், தயவு செய்து சரி என்று சொல்லுங்கள். ஏதாவது நல்ல குறி சொல்லுங்கள். நாங்கள் எல்லாரும் சந்தோஷமாகத் தூங்கப் போய் விடுகிறோம். மாட்டேன் என்று சொல்லாதீர்கள்" என்று அவள் இனிக்க இனிக்கப் பேசினாள்.

பெண்கள் இதில் பத்தில் ஒரு பங்கு சொன்னாலே போதுமே, ஆண்கள் யுத்தத்தில் இறங்கி விடுவார்களே. பெண்கள் இரங்கிக் கேட்டால் யாரால் மறுக்க முடியும்! பாதி மறந்துவிட்டிருந்த சமஸ்கிருத மந்திரங்கள் சிலவற்றை உச்சாடனம் செய்து அவர்கள் மனத்தில் ஒரு பிரமிப்பை உண்டு பண்ணினேன்.



சிறிது நேரத்துக்குப் பிறகு, கண்ணைச் சற்றே திறந்து, ஆழ்ந்த குரலில் "மேரி!" என்றேன்.

கூட்டத்தில் எல்லாருக்கும் ஒரே ஆச்சரியமாகிவிட்டது. அவர்கள் பிரமிப்புடன் கை கொட்ட ஆரம்பித்தனர். ஜார்ஜுக்கு மந்திர தந்திரங்கள் தெரியத்தான் செய்யும். இல்லையானால் "மேரி" இங்கே கூட்டத்திலிருப்பது அவனுக்கு எப்படித் தெரிய முடியும்! அவன் பொழுது இருட்டின பிறகு தானே வந்தான்; அவளை ஜார்ஜ் இன்னும் சந்திக்கக்கூட இல்லையே. குமாரி தாஸனின் முழுப் பெயர் மேரிதாஸன் என்பது யாருக்கும் தெரியாது.

மேரி மிகவும் மகிழ்ச்சியுடனும் ஆவலுடனும் முன் பக்கம் வந்தாள். அவள் உணர்ச்சி வசப்பட்டு ஆர்வத்தால் துடித்துக் கொண்டிருந்தாள். என்னிடம் மூன்றே மூன்று கேள்விகள் கேட்கும்படி கூறினேன்.

மேரி, என்னையே மடக்கிவிட நினைத்தாள்; தன் மனத்தில் உள்ள கேள்வி என்னவென்பதை முதலில் சொல்லும்படி கேட்டாள்.

நான் சிறிது கண்ணை மூடியும் விழித்தும் அவளைக் கவனமாகப் பார்த்தேன். அவள் முக பாவம், குரலின் தொனி, அவள் கைரேகை, விரல் அமைப்பு முதலியவைகளையெல்லாம் நன்கு ஆராய்ந்தேன். கடைசியில் அவளது இடது கையைப் பிடித்து உள்ளங்கையைப் பார்ப்பது போல் பார்த்துக் கொண்டே சொன்னேன்: "நீ சந்தோஷமாக இருப்பாயா என்று கேட்க விரும்புகிறாய்!"

அப்பாவி மேரி, அப்படியே பிரமித்து விட்டாள். நான் சொன்னது அவ்வளவு சரியாகி விட்டது. அடுத்த கேள்வி பற்றி யோசிப்பதற்குக்கூட அவளுக்கு நேரமில்லை. பட்டென்று அடுத்த கேள்வியும் புறப்பட்டது. "சரி, நான் சந்தோஷமாக வாழ்க்கை நடத்தப் போகும் புருஷனின் பெயர் என்ன சொல்லு."

அவளுக்கு உற்சாகமும் விறுவிறுப்பும்; எனக்கோ உளநடுக்கமும் விலவிலப்பும். பேரை எப்படிச் சொல்ல முடியும்! அது எதுவா

# இவை யாவும் ரூ. 152/-க்குத்தான்!

- தண்ணீரால் பாதிக்கப்படாதது.
- தூசி, புழுதி புகாது.
- அதிர்ச்சியைத் தாங்கும்.
- ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் கேஸ்.
- 17-ஜுவல் லீவர் இயக்கம்.
- கவர்ச்சியான நவீன டயல்கள்.

## SANDOW

## ஸாண்டோ

ஆல்ரெஸிஸ்ட்

கெடியாரத் தொழிலில் 140 வருஷ அநுபவம் வாய்ந்த பேவர்-லூபாவின் தயாரிப்பு




**FAVRE-LEUBA & CO. LTD.**

BOMBAY CALCUTTA

L-41

யிருந்தால் அவளுக்கென்ன! கேள்வியைக் கேட்டாகிவிட்டது. பதில் சொல்வது என் கடமை. என்ன செய்வது! மீண்டும் கண்ணை மூடினேன். மூளை மும்முரமாக வேலை செய்தது. திடீர் திடீரென்று கண்ணை விழித்து மேலும் கீழும் பார்த்தேன். "பேரா, அது பாப், ஜான் அல்லது ஜார்ஜ்" என்று வாய் கூசாமல் சொன்னேன்.

மேரிக்கு ஆனந்தம் தாங்க முடியவில்லை. "நீங்கள் மெய்யாகவே பெரிய மந்திரவாதி தான். என்ன ஆச்சரியம்! எங்களைத் தெரிந்தவர்கள் பலருக்கு அவர் பெயர் ஜான் என்பது தெரியும்; ஆனால் என் தாயாருக்குக்கூட அவன் முழுப் பெயரும் தெரியாதே. ராபர்ட் தான் அவனது முதல் பெயர். நீங்கள் கண்டு பிடித்து விட்டீர்கள். சரி, இதோ என் மூன்றாவது கேள்வி. அவன் என்னைக் காதலிக்க ஆரம்பித்து விட்டானா, இல்லையா!"

மேரி என்று அவள் பெயரைச் சொல்லுவது சுலபந்தான். அங்கே வீட்டுக்கு வீடு ஒரு மேரி இருக்கிறாளே. எனவே கூட்டத்தில் யாராவது ஒரு மேரி இருப்பாள் என்ற நிச்சயத்தில் கூறி விட்டேன். அவள் மனத்தில் உள்ள ராபர்ட் எஸ். ஜான் சிறிது பசையுள்ள நாகரிகப் பேர் வழிபோல் இருக்கிறது. அவனைக் கல்யாணம் செய்தால் தன் அந்தஸ்து உயரும் என்று மேரி கருதி யிருக்கிறாள்.

நான் சிறிதும் தயங்காமல் பதில் சொன்னேன். "அவன் மனத்தில் இன்னும் உறுதி ஏற்படவில்லை. இது கொஞ்சம் காலத்துக்குத் தான்; நீ இன்னும் சற்று நவநாகரிகமாக, நாசூக்காக நடந்தால் அவனுக்கு உறுதி ஏற்பட்டுவிடும். என்ன, நான் சொல்வது விளங்குகிறதல்லவா!" என்றேன்.

மேரி பரம திருப்தியுடன், துள்ளிக் குதித்தாள். அவளது சந்தோஷத்தைப் பார்த்த எனக்கும் மகிழ்ச்சி ஏற்பட்டது.

ரேகை சாஸ்திரம் பார்த்துக் குறி சொல்வது அவ்வளவு சிரமமான காரியம் ஒன்றுமில்லை. மிக விவரமாக விஷயங்களை விளக்க ஆரம்பித்து விடக்கூடாது; அப்படி ஆரம்பிக்காத வரையில் தப்பிவிடலாம். அங்கே கூடி யிருந்த பெண்கள் எல்லாரும் திரும்பத் திரும்ப ஒரே கேள்விதான் கேட்டார்கள். "நான் சந்தோஷமாக வாழ்வேனா!" என்பதுதான் அவர்களின் முக்கிய கேள்வி. ஒருத்தி கேட்டாள்: "நான் எப்போதும் மிக சந்தோஷமாக இருக்கிறேன். ஆனால் அது எப்படி என்று எனக்கே தெரியவில்லை. நீங்கள் சொல்லுங்கள்" என்றாள்.

மிருதுவான அவள் அழகிய கரம் அவள் ரகசியத்தைக் கூறிவிட்டது. நானும் தைரியமாகப் பதில் சொன்னேன். "சொர்க்க லோகத்திலிருந்து ஒரு தேவதை இறங்கி வந்து உனக்குப் புருஷனாக வாய்த்திருக்கிறான். அவன் உன்னை வேலைசெய்யவே விடுவதில்லை; அவனே எல்லா வேலையையும் செய்து விடுகிறான். உனக்கு வீட்டுவேலை சிரமமே இல்லை" என்ற பதில் அவளுக்குத் திருப்தி அளித்தது.

அங்கே அன்று இரவு கூடியிருந்தவர்களில் யாரும் இதை வாசிக்கப் போவதில்லை என்ற தைரியத்தில் நான் உங்களுக்கு என் கெட்டிக்காரத்தனத்தின் ரகசியத்தைக் கூறி விடுகிறேன். அந்தப் பெண்ணின் கை பட்டுப் போல் மிருதுவாக இருந்தது. வீட்டு வேலைக்கு உதவியாக எத்தனையோ யந்திர உபகரணங்கள் உள்ள பிரிட்டனில்கூட இவ்வளவு மென்மையான கை எல்லாருக்கும் இருக்க முடியாது; அப்படி ஒருத்திக்கு இருக்க வேண்டுமானால் அவள் உண்மையிலேயே அதிர்ஷ்டசாலியாகத்தான் இருக்க வேண்டும். அந்த சமர்த்துப் பெண் என்னிடம் கை நீட்டுவதற்கு முன் புருஷன் போட்ட கலியாண மோதிரத்தைக் கழற்றி விட்டு வெறுங் கையைத்தான் காட்டினாள். ஆனால், மோதிரம் பதிந்த அடையாளத்தை அவள் நினைத்துப் பார்க்கவில்லை. எனவே, அவள் விவாகமானவள் என்று ஊகிப்பது எனக்குப் பிரமாதமா!

நான் கடையைக் கட்டும் தருணத்தில் வெளியிலிருந்து யாரோ அந்த விடுதிக் கதவைப் படபடப்பாகத் தட்டுவது கேட்டது. கதவைத் திறந்ததுதான் தாமதம், உள்ளே வரலாமா என்று யாரையும் கேளாமலே ஒரு விசித்திர மனிதன் உள்ளே புகுந்துவிட்டான்.

"அடேடே! இது அந்த ஜிப்ஸிக் குறவன் அல்லவா! அந்தக் கூட்டம் இன்று காலையில் தான் இங்கே வந்தது. இவங்க வந்தால் ஒரே தொல்லைதான்" என்று கூட்டத்தில் இருந்த யாரோ சொல்வது கேட்டது.

அந்த ஜிப்ஸி பலமாக நடைபோட்டு வந்தான். அவன் நல்ல வாட்ட சாட்டமாக

வளர்ந்த தேகக்கட்டுள்ளவன். ஆனால், அவன் நிறம் அவ்வளவு சிவப்பல்ல.

அவன் மீசை பட்டாம் பூச்சி போல் பறப்பதற்குத் தயாராக இருந்தது. அவன் காதில் வளையம் அணிந்திருந்தான். தலையில் அவன் ஒரு கைக்குட்டையைக் கட்டிக் கொண்டிருந்தான். சகஜமாக நாம் ஜிப்ஸிக் குறவர்கள் எப்படி உடை உடுத்தி யிருப்பார்கள் என்று எண்ணி வருகிறோமோ அதே போல்தான் இருந்தது அவனது உடை அலங்காரம்.

"ஐயா, என் கையையும் பார்த்துக் குறி சொல்லுங்கள்!" என்றான், அவன்.

"உடல் வலுவுக்கும் ஒரு எல்லை உண்டு. என் மூளையும் கண்ணும் சோர்ந்து விட்டன. இன்று ராத்திரி இனி என்னால் ஒன்றும் செய்ய முடியாது. மன்னிக்க வேண்டும்" என்று நான் பதில் கூறினேன்.

மறு நாள் நான் அங்கிருக்கப் போவதில்லை என்பது எனக்குத் தெரியும். மலை உச்சியில் சூரியன் தோன்றும் அதிகாலையில் நானும் அம்மலையைத் தாண்டிக் கொண்டிருப்பேன். ஜிப்ஸி குறவனையும் என் ஜோஸ்ய நடிப்பையும் நான் இங்கேயே விட்டு விட்டுச் சென்றிருப்பேன்.

ஆனால் அந்த ஜிப்ஸிக் குறவன் என் பதிலைக் கேட்டு மடங்குபவனாக இல்லை. மீண்டும் என்னைக் கெஞ்சினான்: "என் பேரில் சற்று இரக்கம் வைக்க வேண்டும். ஒரே ஒரு கேள்விக்கு மாத்திரம் நீங்கள் விடை சொன்னால் போதும்" என்று கூறினான் அவன்.

என்னைச் சூழ்ந்திருந்தவர்கள் எல்லாருக்கும் தூக்கமயமாயிருந்த போதிலும், அவர்களும் அவனைத்தான் ஆதரித்தார்கள்.

இப்படி அவர்கள் சொல்லும் போது நான் என்ன செய்ய முடியும்!

ஜிப்ஸி குறவன் தன் கேள்வியைக் கேட்டான்: "என் கல்யாணம் ஏன் தடைப்பட்டுப் போய் விட்டது!" அவன் கேள்வியில் அவன் மனக் குமுறல் தொனித்தது. கேள்வியைக் கேட்டு விட்டுத் தன் வலுவான கையை ஆவேசத்துடன் என் முன் நீட்டினான்.

அங்கே கூடி யிருந்தவர்கள் என்னை ரேகை சாஸ்திர நிபுணன் கீரோவை விட ஒரு படி மேலானவன் என்றே கருதி விட்டார்கள். மேலும், ஒரு இந்தியனும், ஒரு ஜிப்ஸியும் இப்படி ரேகை சாஸ்திரப் போட்டியில் ஈடுபட்டிருப்பது அவர்களுக்கு அதிக அக்கறையூட்டக் கூடிய கட்டமாகி விட்டது. ஏனென்றால், இரு இனத்தவர்களுமே குறிகாரர்கள் என்பது அவர்களின் எண்ணம். அவன் கையைக் கூர்ந்து கவனித்துப் பார்த்தேன்.

நான் சட்டென்று நிமிர்ந்து பதில் சொன்னேன்: "உன் கல்யாணம் நடந்திருந்தால் இரத்தம் சிந்தியிருக்கும்; அதனால்தான் கலியாணம் நடக்கவில்லை." என் பதில் எல்லாருக்கும் அதிர்ச்சியைத் தந்துவிட்டது. மனத்திடம் இல்லாத பெண்கள் மயக்கம் போட்டு விழுந்து விடக் கூடிய நிலைக்கு வந்துவிட்டனர். "ஐயோ, தெய்வமே" என்று அவர்கள் அலறி விட்டனர்.

(அடுத்த இதழில் முடியும்)

# வட்ட மேஜை

அருமைக் குழந்தைகளே!

சென்ற மூன்று வாரங்களாகக் "கல்கி"யில் உங்கள் அருமைத் தாத்தா ராஜாஜி அவர்கள் எழுதி வரும் 'பாலர் பகுதி'க் கதைகளை வாசித்துச் சந்தோஷப்படுகிறீர்கள் என்று நிச்சயமாய் நம்புகிறேன். ஆனால் உங்களுக்கு முன் உங்கள் பெற்றோர்களும் அந்தப் பகுதியை வாசிக்க ஆவலுடையவர்களா யிருப்பார்கள் என்றும் தோன்றுகிறது!

போன வாரக் கதையைப் படித்தீர்களா! அநாவசியச் சண்டை போட்டு யாருக்கும் பிரயோசனப்படாமல் ஒரு நல்ல வஸ்துவை இழக்கக் கூடாது என்பதைத் தெரிந்து கொண்டீர்களா! எல்லோரும் ஒற்றுமையாக யிருந்து ஒரு நல்ல வஸ்துவை எல்லோரும் பகிர்ந்து கொண்டு பயன் அடைய முயற்சியுங்கள்.

இந்த வாரக்கதை எப்படி! மிகவும் நன்றாக இருக்கிறது. இல்லையா! வாழை மரம், நல்ல ருசியான பழம், மிகவும் சாதுவான பிராணியான அணில் எல்லாம் சேர்ந்து ஒரு கதை! எல்லாம் உங்களுக்குப் பிடித்தவைகள்.

பாவம்! அணில் சின்னப்பொழுதிலேயே தாயை விட்டுப் பிரிந்து தன் உணவைத் தானே தேடிக்கொள்ள வேண்டியிருக்கிறது. நல்ல வேளை. நீங்கள் அப்படியில்லை. ஆசை ஆசையாக உங்கள் அம்மா விதவிதமான பக்ஷணமும் சாப்பாடும் கொண்டு வந்து கொடுக்கிறாள்.

வாழைக்கு அதைப் பார்த்தால் பரிதாபமாக இருக்கிறது. தன் கன்றுகள் தன்னிடம் ஒட்டிக் கொண்டிருப்பதைச் சொல்லிப் பெருமையடித்துக் கொள்கிறது.

ஆனால் அந்தப் பொல்லாத அணில், ஒரு பெரிய விஷயம் தன் மண்டைக்குள் ஒளித்து வைத்துக் கொண்டிருக்கிறது!

வாழை மரம் தார் போட்டுக் காய்கள் முற்றிய பின் வாழைக்கு ஆயுள் முடிந்தது என்பது அதற்கு முன்னமேயே தெரிந்திருக்கிறது. அதைத்தான் அதற்குச் சொல்லிற்று.

ஆனாலும் வாழைக்கும் வருத்தமில்லை. தன் குலையிருந்த அழகைப் பார்த்துத் தன் உயிர் அதனால் போனாலும் பரவாயில்லை என்று நினைக்கிறது!

நல்ல வேளை. மனிதர்களாகிய நமக்கு அப்படியில்லை. நீங்கள் எல்லோரும் உங்கள் அப்பா, அம்மாமார் பெருமைப்படும்படி நன்றாக வாசித்துச் சமர்த்தாய் பெரியவர்கள் சொன்னபடி நடந்து கொண்டால், உங்கள் தாய் சந்தோஷத்தில் இன்னும் அதிக நாள் இருந்து உங்களைப் பார்த்து மேலும் மேலும் சந்தோஷமடைவார்கள். ஆகையால் இந்தக் கதைகளை எல்லாம் வாசித்து அறிவு அடைந்து உங்கள் பெற்றவர்களைச் சந்தோஷப்படுத்தி வருவீர்கள் என்றே தாத்தா நம்புகிறார்.

சென்னை
22-12-55

சுந்தரம்

# "ரைஸிங்ஸன்" உள்ளூர் பவர் ஸ்டேஷன்



இந்தியா முழுவதுமுள்ள கோடிக்கணக்கான கிராமவாசிகள் தங்கள் வாழ்க்கையின் உபயோகத்திற்கு மண்ணெண்ணெயை நம்பி இருக்கின்றனர். இதை அவர்களுக்குக் குறைவின்றி கிடைக்கச் செய்வது எங்களது முக்கியமான கடமைகளில் ஒன்றாகும். இந்தியாவின் நாலா பக்கங்களிலும் நாங்கள் வைத்து நடத்திவரும் மண்ணெண்ணெய் விநியோக ஏற்பாடுகளையெல்லாம் கிராமவாசிகள் அறியாமலிருக்கலாம். மற்றும் பர்மா-ஷெல் ஸ்தாபனத்தார் 15,000க்கு அதிகமான சிப்பந்திகளின் உதவியால் நிர்வகித்துவரும் 800 ல் அதிகம் டிப்போக்கள், 453 விநியோக லாரிகள், ஆகியவைகளைப் பற்றியும் அவைகளின் உதவியால் எண்ணெய் விநியோகம் மிகவும் திறமையாக நடந்து வருவதைப்பற்றியும் கிராமவாசிகள் அறியாமலிக்கக்கூடும். ஆனால் "ரைஸிங் ஸன்" "சக்கர்" "ஸ்வான்" "விக்டோரியா" ஆகிய அடையாளக் குறிகள் உள்ள பர்மா-ஷெல்லார் விற்பனை செய்து வரும் மண்ணெண்ணெய்களை அவர்கள் நன்கு அறிவார்கள். அவர்களுக்கு மண்ணெண்ணெய் உள்ளூர் "பவர் ஸ்டேஷன்" போல் ஆகும்.




**பர்மா-ஷெல்...**
**பாரத நாட்டின்**
**வாழ்க்கையில்**
**ஈடுபட்டிருக்கிறது**

மூன்று காரியங்களையும் சாதிப்பது கால்கேட் முறையே!

உங்கள் வாய்த் துர்நாற்றத்தை அகற்றுகையில்
உங்கள் பற்களை சுத்தி செய்து
அவற்றை சொத்தையாகாமல் தடுக்கிறது




DC6/23

---



# அந்த இருமலை நிறுத்துக தொண்டை ரணத்தை சமனமூட்டி குணப்படுத்துக

பெப்ஸ் தொண்டை மற்றும் மார்பு வலி நிவாரண மாத்திரைகளில் சமனமூட்டி குணப்படுத்தும் ரசங்கள் அடங்கியுள்ளன. பெப்ஸை சுவைக்கும்போதே, இந்த ரசங்கள் ஆவியாக மாறி உங்கள் சுவாசத்துடன் தொண்டை சுவாசக் குழாய் மூலமாக சுவாசப்பைக்குச் செல்லும். ஆகவே கோளாறின் ஆரம்பஸ்தானத்திற்கே சென்று வேலைசெய்கின்றன. அதனால்தான் பெப்ஸ் கைகண்ட ஔஷதமாய் விளங்குகிறது. பெப்ஸ் இருமலை நிறுத்தி, தொண்டை ரணத்தை சமனமாக்கி, உங்கள் சுவாசப் பையை காப்பாற்றி, கபத்தை உடைத்து, அடைப்பை நீக்குவதுடன் இன்ப்ளூயன்ஸா மற்றும் பிராங்கைடிஸ் சிகிச்சையில் இன்றியமையாததாயுமுள்ளது.




பெப்ஸ் சாப்பிடுங்கள் **PEPS**

உலக பிரசித்தி பெற்ற

தொண்டை, மார்புவலி நிவாரண மாத்திரைகள்.

எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்.

FPT. 29-TAM

மதராஸிற்கு ஸோல் ஏஜெண்டுகள்: தாதா & கம்பெனி, பார்க் டவுன்

# ஆற்றங் கரையினிலே

பேராசிரியர்: ரா. பி. சேதுப்பிள்ளை



## 51. புதுவைமா நகர்

தமிழகத்தில் புதுவைமா நகரம் ஒரு சிறந்த துறைமுகம். கலங்கள் இயங்கும் அந்நகரில் நலங்கள் பல உண்டு. "இம்மென்றால் சிறைவாசம்; ஏன் என்றால் வனவாசம்" என்னும் கொடுங்கோலாட்சியால் நலிவுற்ற நல்லறிஞர்க்குப் புகலிடமாய் நின்றது புதுவைமா நகரம். ஆங்கில அரசாட்சியின் கொடுமைக்கு ஆற்றாது வெளிப்பட்ட வங்கநாட்டு ஞானச் செல்வராகிய அரவிந்தரை அடைக்கலப் பொருளாக ஏற்று ஆதரித்த பெருமை வாய்ந்தது அந்நகரே! 'பாட்டுக்கொரு புலவன்' என்று தமிழ் நாட்டார் பாராட்டும் பாரதியார்க்குப் பல்லாண்டு புகலிடம் அளித்துப் பெருமை பெற்றதும் அந்நகரே!

இத்தகைய புகழ் பெற்ற புதுவைமா நகரில் இருநூறாண்டுகளாகப் பிரஞ்சு அரசாங்கம் ஆட்சி புரிந்தது. அவ்வாட்சியாளருள் தலைசிறந்தவர் டூப்பிளே என்று வரலாற்று அறிஞர் கூறுவர். அவருடைய உருவச் சிலை புதுவைக் கடற்கரையில் இன்றும் நின்று அணி செய்கின்றது. அச்சிலை நிறுவப்பட்ட போது தமிழ்ப் பாவலர் பாட்டிசைத்தனர். அத்தலைவனது போரின் வெம்மையும் ஆட்சியின் செம்மையும் அப்பாட்டிலே இனிது புகழப் பெற்றுள்ளன.

"தாரிலங்கு மலையெனும் தோளினன்
  தாழ்ந்திடாரைத் தறிக்கும்ஒள் வாளினன்
போரிலங்கும் உயர்நாம வேலினன்
  போற்றுவீரக் கழலணி காலினன்
சீரிலங்கு பசும்பொற்செங் கோலினன்
  செய்யமா முறைசெப்புநல் நாவினன்
ஏரிலங்கும் டூப்பிளேஎனும் நாமம்பூண்டு
  எங்கள்வேந் தென்றிலங்கும்இவ் ஏந்தலே"

[தார்-மாலை; தாழ்ந்திடார்-பணியாதார்]

என்ற பாட்டில் புதுவை வேந்தன் என விளங்கிய டூப்பிளேயின் தோற்றமும் ஏற்றமும் எழுதிக் காட்டப்படுகின்றன.

புதுவைமா நகரில் அவர் ஆட்சி புரிந்த காலத்தில் தமிழ்ப் பெருமகன் ஒருவர் அங்கு தழைத்து வாழ்ந்தார். ஆனந்தரங்கப் பிள்ளை என்பது அவர் பெயர். சென்னைக்கு அருகேயுள்ள பிரம்பூரிலே தோன்றிய ஆனந்தரங்கர் இளமையிலே புதுவையம் பதியை அடைந்தார்; உழைப்பினால் உயர்ந்தார்; மதிநலத்தால் மாண்புற்றார். பிரஞ்சு அரசாங்கத்தின் பெருமதிப்பிற்கு உரியரானார்.

செல்வச் செழுமையுற்று வாழ்ந்த ஆனந்தரங்கர் செந்தமிழை ஆதரித்தார்; வரிசை யறிந்து புலவர்க்குப் பரிசளித்தார்; வாடி வந்தடைந்த அறிஞரது வறுமையை ஒழித்து இன்புற்றார்.

அற்றாரை ஆதரிக்கும் பெற்றி வாய்ந்த ஆனந்தரங்கரின் பெருமையை அறிந்தார் மதுர கவிராயர்; புதுவையை நோக்கிப் புறப்பட்டார். புள்ளும் பொழுதும் பார்த்து உள்ளம் தழைத்தார். மஞ்சு தவழும் அம்மணி நகரில் அஞ்சேல் என்று அருள்புரியும் ஆனந்தரங்கரைக் கண்டார்; நெஞ்சம் குளிர்ந்து பாடினார்.

"உலம்கொண்ட மணிப்புயனே பிரம்பூர்
  ஆனந்தரங்கா! உன்பாற் செல்ல
வலம்கொண்ட கருடனையாம் இடங்கண்டோம்
  எழில்நரையான் வலத்தே கண்டோம்
பொலங்கொண்ட மணிமாட மீமிசையில்
  புயல்தவழும் புதுவை என்னும்
தலம்கண்டோம், நினதுநகை முகங்கண்டோம்
  இனிவேண்டும் தனம்கண் டோமே"

[உலம்-திரண்ட கல்; வலம்-வெற்றி; நரையான்-வெள்ளைப் பசு; மீமிசை-உச்சி]

என்று பாட்டால் நன்றி செலுத்தினார்.

பசியென்னும் தீப்பிணியால் வருந்திய கவிஞர் ஒருவர் பலநாள் வழி நடந்து ஆனந்தரங்கரது மாளிகையை அடைந்தார். அப்போது அவர் அங்கில்லை. அறுவடைக் காலமாதலால் நிலத்தைப் பார்வையிடச் சென்றிருந்தார்; அவர் எப்போது வருவாரோ என்று ஏக்கமுற்ற கவிஞர் கழனிக்கு வழிகாடிச் சென்றார். அங்கு வரப்பிலே சிதறிக் கிடந்த நெல்லை ஒவ்வொன்றாகப் பொறுக்கிச் சேர்த்துக் கொண்டிருந்த வள்ளலைக் கண்டார். உதிர்ந்த நெல்லை ஒன்று விடாமல் களஞ்சியத்திற் கொண்டு சேர்க்கும் இவரா கற்றறிந்தோர்க்கு உண்டியும் பொருளும் வழங்குகின்றார் என்று ஐயுற்றார். ஆயினும் ஒருவாறு மனந் தெளிந்து தாம் வந்த நோக்கத்தைத் தெரிவித்தார். ஆனந்தரங்கர் மறுமொழி ஒன்றும் சொல்லாமல் நெல்லைப் பொறுக்கும் பணியில் ஈடுபட்டிருந்தார். கவிஞர் பசி பொறுக்க மாட்டாமல் பின்னும் தமது குறைபாட்டையே பன்னிக் கொண்டிருந்தார். குறிப்பறிய மாட்டாத கவிஞரை நோக்கி, "ஏன் பறக்கிறீர்! சற்றுப் பொறும்" என்றார் அப் பெருமகன். அந் நிலையில் பாசங்கலந்த பசியோடு வந்தது ஒரு தமிழ்ப் பாட்டு.

"கோக்குப் பறக்கும், புறப்பறக்கும்
குருவிபறக்கும், குயில் பறக்கும்
நக்குப் பொறுக்கி களும்பறப்பர்
நானேன் பறப்பேன் நராதிபனே!
திக்கு விசயம் செலுத்திஉயர்
செங்கோல் நடாத்தும் அரங்கா நின்
பக்கம் இருக்க ஒருநாளும்
பறவேன் பறவேன் பறவேனே"

என்ற பாட்டைக் கேட்டு இன்புற்ற ஆனந்தரங்கர் அக் கவிஞர்க்குத் தக்க பரிசளித்து அனுப்பினார்.

புதுவைமா நகர்க்கு என்றும் அழியாத பெருஞ் சேவை செய்துள்ளார் ஆனந்தரங்கர். அந் நகரில் அவர் கண்ட காட்சிகளையும் கேட்ட செய்திகளையும் நாள் தோறும் குறித்து வைத்தார். தினசரி என்று அந்த 'டைரி'க்குப் பேரிட்டார்.

இருபத்தைந்தாண்டு நிகழ்ச்சிகளைத் தன்னகத்தே கொண்ட அவ்வருமையான தினசரி, ஆங்கிலத்திலும் பிரஞ்சிலும் மொழிபெயர்க்கப்பட்டுப் பாராட்டப் பெற்றுள்ளது. அக்காலத்தில் நிகழ்ந்த அரசியல் சூழ்ச்சிகளும், வெள்ளைக்காரரின் உள்ளப் போக்குகளும், பஞ்சத்தின் கொடுமையும் லஞ்சத்தின் கொண்டாட்டமும், நாட்டு மக்களின் பழக்க வழக்கங்களும் அந் நூலில் விளக்கமாகக் கூறப்படுகின்றன.

சுவையான பல செய்திகள் அத் தினசரியில் உண்டு. அவற்றுள் ஒன்று டூப்ளேயின் பேராசையைக் காட்டுவதாகும். புதுச்சேரியின் அருகே முரட்டாண்டிச் சாவடி என்ற ஊர் உள்ளது. அது டூப்ளே துரைக்குப் பிடித்தமான இடம். அவர் தங்கியிருப்பதற்காக அங்கே ஒரு பங்களா கட்டப்பட்டது. அதைப் பெரிய ஊர் ஆக்க வேண்டும் என்று ஆசைப்பட்டார் அவர்; அதற்காகப் புதுச்சேரியில் உள்ள பெரிய வர்த்தகர் முதலியோரை அங்கு வீடு கட்டும்படி தூண்டினார். பழைய பெயரை மாற்றி டூப்ளேப் பேட்டை என்று அதற்குப் பேரிட்டார். எல்லோரும் புதுப் பெயரையே வழங்க வேண்டும் என்று ஆணை பிறப்பித்தார். பழைய பெயரை எவரேனும் சொன்னால் அபராதம் விதிக்கப்படும் என்றும் கட்டளையிட்டார். இச் செய்தியைத் தமது தினசரியிலே குறிப்பிட்டுள்ளார் ஆனந்தரங்கர்.

புதுவை நகரில் கிறிஸ்தவர்கள் வழிபடும் புனிதமான கோயில்கள் பல உண்டு. அவற்றைப் பற்றிய அருமைத் தமிழ்ப் பாடல்கள் உள்ளத்தை உருக்கும் தகையனவாகும்.

"கற்பினர்க்கோர் ஒளியாய
கன்னிமேரி அன்னை
அற்புதமாய் ஈன்றநீ
அரிவைபவம் ஒழிக்க
பொற்புறஇங் களித்தபரி
பூரணசே சென்னும்
தற்பரனை வணங்காத
தலையென்ன தலையே!
சாமிதனை வணங்காத
தலையென்ன தலையே"

என்பது சிலப்பதிகாரப் பாணியில் அமைந்த பாட்டு. இன்னும் "கர்த்தருக்குத் தொண்டு செய்யாக் கையென்ன கையே" என்றும், 'கன்னி மகன் உருக்காணாக் கண்ணென்ன கண்ணே' என்றும், 'சேசுபரன் சீர்கேளாச் செவியென்ன செவியே' என்றும் உள்ளம் கனிந்து பாடியுள்ளார் ஒரு கவிஞர்.

இத்தகைய செம்மை வாய்ந்த திருக்கோயிலில் ஒருநாள் பூசை நிகழும்பொழுது பணக்காரப் பெண் ஒருத்தி மெல்லிய சல்லாச் சேலை கட்டிக் கொண்டு, கலவைச் சந்தனம் பூசிக் கொண்டு, நகைகள் எல்லாம் அணிந்து கொண்டு பெரிய பாதிரியார் அருகே போய் அமர்ந்தாள். அப்போது அவர் பூசையை நிறுத்தி விட்டு, அவளைச் சுட்டிக் காட்டி 'புண்ணியவதி! நீ பூசை செய்தது போதும்! எழுந்திருந்து வீட்டுக்குப் போ' என்று சொல்லி அனுப்பினார். இது தினசரியில் கண்ட செய்திகளில் ஒன்று.

# எமது
# புது வருஷ
# வாழ்த்துக்கள்!



RISING SUN BRAND

# சூரியன் மார்க்கு

உயர்ந்த ரக **மைதா** (கோதுமை மாவு)

**சூஜி** (ரவை) - **ஆட்டா** மாவு




தயாரிப்பவர்கள் :

## செஞ்சுரி பிளவர் மில்ஸ் லிமிடெட்,

இந்தியாவில் முதன்மையான நியூமாடிக் மில்

மானேஜிங் ஏஜண்டுகள் :

## ஸௌந்தரராஜன் & கம்பெனி லிமிடெட்,

221, கோவிந்தப்ப நாயக்கன் தெரு, மதராஸ்-1

போன் : 4165    தபால் பெட்டி 1558    தந்தி : MATHOORAN

உங்களது தொடர்ந்த அன்பும் ஆதரவும் எங்களுக்கு உற்சாகமும், ஊக்கமும் தந்து எங்கள் பொருள்களின் உற்பத்தியை அதிகரிப்பதற்கான ஏற்பாடுகளைச் செய்யத் தூண்டியிருக்கின்றன என்பதை நன்றியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

EP



# உணவு முனையில்

திட்டத்தின் பிரதான சாதனைகளுள் ஒன்று உணவு முனையாகும். ஆரம்பமான காலத்தில் நாட்டில் உணவுப் பஞ்சம் மிகத் தீவிரமாக இருந்தது. திட்டத்தில் 1956-க்குள்ளாக உணவு தானிய உற்பத்தியளவை 76 லட்சம் டன்கள் அளவாவது அதிகரிக்க வேண்டும் என்று உத்தேசிக்கப்பட்டது. மூன்றே ஆண்டுகளில் லட்சிய எல்லை அதிக்கிரமிக்கப்பட்டு 114 லட்சம் டன்கள் உபரியாக உணவு தானியங்கள் உற்பத்தி செய்யப்பட்டன. 1954-55 லும் தொடர்ச்சியாக முன்னேற்றமடைந்த உணவு உற்பத்தி மேலும் 2 லக்ஷம் டன்கள் அதிகரித்துள்ளது.

இக் குறிப்பிடத் தகுந்த வெற்றிக்குக் காரணம் "அதிக உணவு உற்பத்தி செய்யுங்கள்" என்ற பிரசாரமும், நல்ல பருவ மழைகளும், சீர்திருத்தப்பட்ட விவசாய முறைகளும், அதிக நீர்ப்பாசன வசதி முதலியவைகளுமாகும். ஏராளமான தரிசு நிலங்கள் சீர்திருத்தி பண்படுத்தப்பட்டு, வாய்க்கால்கள் வெட்டப்பட்டு, கிணறுகள் இறக்கப்பட்டு, உணவுப் பங்கீடு முதலிய கட்டுப்பாடுகள் அனைத்தும் நீக்கப்பட்டுவிட்டன.

## மக்களின் சுபிட்சத்திற்காக மக்களின் திட்டம்

DA-55/117 TM

கல்கியின்

# அமரதாரா



## அத்தியாயம் 20

## பூரண சந்திரன்

கன்றுக் குட்டியின் தும்பைப் பிடித்துக் கொண்டிருந்த அந்தப் பெண் திரும்பிப் பார்த்தாள். என்ன அழகான முகம்? இத்தனை பெரிய ஆபத்திலிருந்து தப்பியும் அவளுடைய முகத்தில் பீதியின் அறிகுறியே இல்லை. குறும்புத்தனம் தவழ்ந்த முகத்தில், பரபரவென்று அலையும் கண்கள். அவள் கன்றின் தும்பைப் பிடித்துக் கொண்டு, அழுக்குத்தாவணியுடன் நின்ற காட்சி இன்னும் என் கண் முன்னால் நிற்கிறது. ஓடி வந்ததால் முகத்தில் அரும்பிய வியர்வை முத்துத் துளிகளாகக் காட்சியளித்தது. தலையெல்லாம் கலைந்து நெற்றியில் அவளுடைய அழகிய கூந்தல் சுருள் சுருளாகத் தொங்கியது.

சினிமாவில் 'மேக்கப்'புடன் நான் பார்த்தபோது கூட, அன்று இந்துமதி அழகாக இருந்ததுபோல் இல்லை என்றுதான் தோன்றியது.



அவள் என்னைத் திரும்பிப் பார்த்ததும் எனக்குச் சிரிப்பு வந்தது. என்னையறியாமலேயே "நல்ல கெட்டிக்காரப் பெண் அம்மா, நீ! உயிர் போனாலும் போகிறதென்று கன்றுக்குட்டியின் தும்பைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டிருக்கிறாயே?" என்றேன். நான் சொல்லி முடிப்பதற்குள் மறுபடியும் கன்றுக்குட்டி துள்ளி ஓடி விட்டது. அவள் ஒரு கணம் திகைத்தாள். அதைக் கண்டதும் நான் கலகலவென்று சிரித்தேன். அவளுடைய முகத்திலும் சிரிப்புத் தவழ்ந்தது. அழகிய குவளை மலர் குவிவதுபோல் அவள் கண்கள் கவிழ்ந்தன. மறுபடியும் அந்த மலர் ஒரு தடவை மலர்ந்து என்னைப் பார்த்தது. அவளுடைய இதழ்களும் மலர்ந்தன. அவ்வளவுதான்! கண் இமைக்கும் நேரத்தில் அந்தப் பெண் ஓடி மறைந்து விட்டாள். கன்றுக்குட்டியை விட அவள் வேகமாக ஓடியதாக எனக்குப் பட்டது.

கார் மேலே நகர்ந்தது. தங்கபாண்டியன் என்னை நோக்கி, "என்ன துரை! இப்படித் திகைத்துப் போய்விட்டாய்?" என்று கேட்டான்.




"அப்பாடா! அந்தப் பெண் எப்படிப் பட்ட ஆபத்திலிருந்து இன்று பிழைத்தாள். நல்ல காலமாய்ப் போயிற்று. நான்

ஆனந்தி



உங்கள் ஊரில் காலடி எடுத்து வைத்ததும் ஒரு விபத்துக்குச் சாட்சி சொல்லும் அவசியம் ஏற்படாமல் தப்பினேன்'' என்று கூறினேன்.

தங்கபாண்டியன் சிரித்துக் கொண்டே, ''ஆமாம். இப்போதே நமக்குக் கவலைப்பட நிறைய விஷயம் இருக்கிறது. வீட்டுக்குப் போனதும் ரகளை இருக்கிறது. அதற்குள் இங்கே ஒன்றும் ஆகாமலிருந்தது பெரிய காரியம்'' என்றான்.

பிறகு அவனாகவே, ''அந்தப் பெண்தான், நான் சொன்னேனே காசிலிங்கம், அவருடைய பெண் இந்துமதி'' என்றான்.

இந்துமதி என்ற பெயரில் இருந்த அழகு என் நெஞ்சை நிறைத்தது. என் இதய வானத்தில் பூரண சந்திரனாக அவள் வதனம் பவனி வந்தது.

''என்ன பொருத்தமான பெயர்? முகம் பூரண சந்திரன் மாதிரியே இருக்கிறதே'' என்று என்னை யறியாமல் கூறி விட்டேன். உடனேயே ஏன் அப்படிச் சொன்னோமென்று தோன்றியது. ஒருகண நேரம் பார்த்த ஒரு பெண்ணைப் பற்றி அப்படி நான் கூறுவது பொருத்த மில்லாத விஷயமாக எனக்கு அப்பொழுது தோன்றிற்று.

அதற்கேற்ற மாதிரி தங்கபாண்டியன், ''அடேயப்பா! சரித்திர ஆராய்ச்சிக் கிறுக்கு அதற்குள் மறந்து விட்டதா? இலக்கியப் பித்துப் பிடித்து விட்டதாக்கும்? அவளைச் சரியாகக் கூடப் பார்க்க வில்லை. அதற்குள் பூரண சந்திரன் என்கிறாயே!'' என்றான்.

''அதற்காகச் சொல்லவில்லை, தங்கபாண்டியா! சில பேருக்குத்தான் பெயர் பொருத்தமாக அமைகிறது. அதற்குக்கூட அதிர்ஷ்டம் வேண்டும்? அழகான பெண்ணுக்கு அழகிய பெயரும் அமைந்திருக்



கிறதே என்று சொன்னேன். ஏன் உன் பெயரைத்தான் எடுத்துக் கொண்டேன். என்ன பொருத்தமாக அமைந்திருக்கிறது? உன் உள்ளமும் தங்கம். உன் பெயரும் தங்கம்'' என்று சொல்லித் தப்பித்துக் கொண்டேன். ஆனாலும் உள்ளத்தில் ஏதோ ஒன்று உறுத்திற்று. அது என்னவிதமான உணர்ச்சி என்று விவரிக்க முடியாது.

''உன்மாதிரி பேசக் கற்றுக்கொள்ள வேண்டுமென்று நானும் எவ்வளவோ முயற்சி செய்கிறேன். ஆனால் வரவே மாட்டேனென்கிறது ரங்கதுரை'' என்று சிரித்தான் தங்கபாண்டியன்.

அதற்குள் அரண்மனை வந்துவிட்டது. காரை விட்டு இறங்கியதும் தங்கபாண்டியன் வாசலில் நின்றுகொண்டிருந்த ஆளைப் பார்த்து, ''மாமா எங்கே?'' என்று கேட்டான்.

''சாயங்காலம் வருவதாகச் சொல்லிவிட்டு எங்கேயோ போனார். விடியற்காலையிலேயே போய்விட்டார்'' என்றான் அந்த ஆள். தங்கபாண்டியன் நிம்மதியாக ஒரு பெருமூச்சு விட்டான். இறங்கிய உடனேயே அவர் ஏதாவது சண்டை போட்டு ரகளை செய்தால் என்ன செய்வதென்று அவனுக்குக் கவலையாக இருந்திருக்கலாமல்லவா? மாமா இல்லை என்று தெரிந்ததும் குதூகலமாக என் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு உள்ளே சென்றான்.

''மாமா வரும் வரையில் நிம்மதியாக இருக்கலாம். அவர் வந்து கோபித்துக் கொண்டாலும் பயப்படப் போவதில்லை'' என்றான்.

இதைப்பற்றி அவன் எவ்வளவு தூரம் கவலைப்படுகிறான் என்று அந்த வார்த்தைகளிலிருந்தே தெரிந்தது.

''நீ இப்படி அவருக்குத் தெரிவிக்காமல் என்னை அழைத்து வந்திருக்க வேண்டியதில்லை. முன்னாலேயே எழுதியிருக்கலாம். அப்போது உனக்குக் கொஞ்சம் கவலை குறைவாக இருக்கும்.''

''போதும்! பேசாமலிரு. என் வீட்டுக்கு என் நண்பனை நான் அழைத்து வருவதற்கு அவரிடம் எதற்காக உத்தரவு கேட்க வேண்டும்? இனிமேல் எல்லாம் என் இஷ்டப்படிதான் செய்யப் போகிறேன் என்பதை இன்று அவர் தெரிந்து கொள்ளட்டும்'' என்றான்.

''அப்படியானால் எதற்காகக் கவலைப்படுகிறாய்?'' என்றேன்.

அதன் பிறகு நாங்கள் ஸ்நானம் செய்து விட்டுச் சாப்பிட்டோம். அது வரை தங்கபாண்டியனின் வீட்டில் வேறு யாரும் இருப்பதாகவே தெரியவில்லை. வேட்டை நாய்களும், வேலைக்காரர்களும்தான் காணப்பட்டார்கள்.

சாப்பிடும்போது, ''தங்கபாண்டியா! உன் தங்கை லக்ஷ்மியும் வீட்டில் இல்லையா? யாரையுமே காணோமே?'' என்று கேட்டேன்.

''நீ முதலில் நன்றாகச் சாப்பிடு. அவர்களைப் பிறகு பார்க்கலாம். எங்கும் ஓடிப் போய்விட மாட்டார்கள்'' என்று சிரித்துக்கொண்டே சொன்னான். சாப்பாடு முடிந்த பிறகு பலாப்பழமும், மாம்பழமும், தேனும் வந்தன.

''ஏன் பாண்டியா! ஒரே நாளில் ஜமீனின் அன்னத்தை யெல்லாம் சாப்பிட்டு விட முடியுமா?'' என்றேன். ஆனால் 'ஹாஸ்டல்' சாப்பாடு சாப்பிட்டுச் சாப்பிட்டுச் சலித்துப் போயிருந்த எனக்கு அங்கே சாப்பிடுவதற்கு ஒரே சந்தோஷமாக இருந்தது.

தங்க பாண்டியன் அன்போடு 'இதைச் சாப்பிடு அதைச் சாப்பிடு' என்று வேறு உபசாரம் செய்தான். என் அன்னை இறந்து போன பிறகு என்னை யார் 'சாப்பிடு' என்று பிரியத்துடன் கூறியிருக்கிறார்கள்? ஆகவே அவனுடைய உபசரிப்பு எனக்கு உவகை யளித்தது.

அதன் பிறகு நான் அந்தப் புரத்துக்கு அழைத்துச் சென்றான் தங்க பாண்டியன். வெகுகாலத்துக்கு முன்னால் மகாராஜாக்கள் வசிப்பதற்குக் கட்டப்



பட்ட மாளிகை யாகையால் பழைய மாதிரியில் அமைந்திருந்தது. பிரதான வாசல் கட்டடத்தை மட்டும் புதுப்பித்துக் கட்டியிருந்தார்கள். நாங்கள் இருந்த முன்பக்க மாளிகையிலிருந்து ஒரு நீளமான வராண்டா இன்னொரு கட்டடம் வரை சென்றது. அதன் இரு பக்கத்திலும் பெரிய தோட்டம் அமைந்திருந்தது.

அந்த மாளிகை முன் பக்கத்திலிருந்ததற்கு முற்றும் மாறுபட்டிருந்தது. முன் பக்கத்து மாளிகை பட்டணத்துக் கட்டடங்களை ஒத்து இருந்தது. இதுவோ மரத் தூண்களும் திண்ணைகளும் கொண்ட கட்டடமாக இருந்தது. ஆயினும் விசாலமான கட்டடம்தான்.

நான் தங்கபாண்டியனிடம், "உன் தங்கையை அந்தப்புரத்தில் பூட்டி வைத்திருக்கிறாய் என்று எனக்குத் தெரியாதே" என்றேன்.

"இதெல்லாம் சொக்கையா மாமாவால் வந்த வினைதான், துரை. அப்பா இருந்தபோது அரண்மனைப் பெண்களுக்குக் கொஞ்சம் சுதந்திரம் இருந்தது. என் அம்மா இறந்து போனதும் அடியோடு ஒன்றுமில்லாமல் போய் விட்டது. கோவில் உற்சவ காலங்களில் தவிர அவர்கள் வெளியே வரவே கூடாது என்று உத்தரவு."

"அவர்கள் என்றால் யார்?"

"என் தங்கை லக்ஷ்மி. என் அம்மாவின் சகோதரியும் அவளுடைய பெண்கள் இரண்டு பேரும் இங்குதான் இருக்கிறார்கள். தன் தங்கைதானே என்று கூட மாமா பார்ப்பதில்லை. எப்போதும் அவருக்குப் பயந்து சாகவேண்டியிருக்கிறது. என் சின்னம்மாவும் அவருடைய பெண்களும் இல்லாவிட்டால் லக்ஷ்மி என்ன செய்வாள்? பாவம்!" என்றான் தங்க பாண்டியன்.

"உன் தங்கை படிக்கிறாள் என்றாயே. பள்ளிக்கூடம் செல்வதில்லையா?"

"இல்லை, துரை. இவர்கள் மூவருக்கும் இந்த ஊரிலிருக்கும் சுசீலாதேவி என்ற உபாத்தியாயினி பாடம் சொல்லிக் கொடுத்து வருகிறார்" என்றான்.

முன் பக்கத்து அறைக்குள் சென்று உட்கார்ந்தோம். உட்கார்ந்ததும் நான் அறையைக் கவனித்தேன். கட்டடம் பழையமாதிரி இருந்தாலும் உள்ளே அலங்காரங்கள் கொஞ்சம் புதுமாதிரியில் அமைந்திருந்தன. ஒரு மேஜை. அதன்மீது பூவேலை செய்த விரிப்பு. ஒரு அலங்கார மின்சார விளக்கு அந்த மேஜைமீது இருந்தது. நான்கு நாற்காலிகள் கிடந்தன. மேஜைக்கு நேரே ஸரஸ்வதியின் படம் ஒன்று மாட்டப்பட்டிருந்தது. இன்னொரு பக்கத்தில் புத்தக அலமாரி ஒன்று இருந்தது. அதில் பல புத்தகங்கள் அழகாக அடுக்கப்பட்டிருந்தன. ஆனால் அந்த வீட்டுக்கும் அலங்காரத்துக்கும் பொருத்தமாகவே இல்லை.

அந்தச் சமயத்தில் கனமாகத் தொங்கிய திரையை விலக்கிக் கொண்டு ஒரு வயதான அம்மாளும் மூன்று பெண்களும் வந்தார்கள்.

தங்கபாண்டியன் உடனே, "சின்னம்மா! உங்களிடம் முன்பு சொன்னேனே, என்னுடைய அத்யந்த சிநேகிதன் ஒருவன் இருக்கிறான் என்று. அவன்தான் இவன். ரங்கதுரை என்று பெயர்" என்றான்.

நான் கைகளைக் கூப்பினேன்.

"உட்காரப்பா" என்றார் அவர்.

"இவள்தான் என் தங்கை லக்ஷ்மி" என்று ஒடிந்து விழுவது போலிருந்த தன் தங்கையை எனக்கு அறிமுகப்படுத்தி வைத்தான் தங்கபாண்டியன். அரண்மனையின் செழிப்பிலுள்ள இளம் வயதுப் பெண்கூட இப்படி இருக்கிறாளே என்று வியந்தேன்.

"இவர்களும் என் தங்கைகள்தான். ஸரஸ்வதி, ஜயலக்ஷ்மி!" என்றான் தங்கபாண்டியன். ஐந்து நிமிஷத்தில் அங்கிருந்து புறப்பட்டு எங்கள் அறைக்குச் சென்று விட்டோம். புறப்படும்பொழுது, "மறுபடியும் மாலையில் ரங்கதுரையுடன் வருகிறேன் லக்ஷ்மி!" என்று கூறினான் தங்கபாண்டியன்.

"சாயங்காலம் எங்கள் சுசீலா டீச்சர் கூட வருவார். கட்டாயம் அழைத்து வாருங்கள். அவரை நீங்கள் பார்க்க வேண்டும்" என்றாள் லக்ஷ்மி.

எங்கள் அறைக்குச் சென்றதும் நான் தங்கபாண்டியனிடம், "ஏன் உன் தங்கை இப்படி இளைத்துப் போய் இருக்கிறாள்?" என்று கேட்டேன்.

"எல்லாம் வேதனைதான் துரை! இந்த மிகப் பெரிய சிறைக்கூடத்தில் அவள் அடைபட்டுக் கிடக்கிறாள். உன்னைப்போல் யாராவது உதவிசெய்து அவளை விடுவிக்க வேண்டும். அகம் பூரித்தால், தானாகவே முகமும் பூரித்து விடும்" என்றான்.

லக்ஷ்மியின் கண்களில் தெரிந்த ஏக்கம் எனக்கு நினைவுக்கு வந்தது. எனக்கு ரொம்பப் பரிதாபமாக இருந்தது.

"ஆமாம்! சீக்கிரம் கல்யாணம் செய்து கொடுத்துவிடு. இனிமேல் அவளைக் கவனித்துக் கொள்வது முழுவதும் உன் பொறுப்புத்தானே?" என்றேன்.

"ஆமாம், துரை! அதற்காகவாவது நான் என் மாமாவுடன் போராடியே தீரவேண்டும். இன்று காலை நீ ஸ்நா


FOR
BETTER LIGHT
SWITCH TO
METROVICK
FLUORESCENT
METROVICK
LAMPS








COLGATE

னம் செய்யப் போயிருந்தபோது, என் சின்னம்மாவைப் பார்த்தேன். அவர் கூறியதைக் கேட்டதும் என் மனம் துடித்துப் போய் விட்டது. சொக்கையா மாமா லக்ஷ்மியைத் தான் கல்யாணம் செய்து கொள்ள உத்தேசித்திருப்பதாகக் கூறினாராம். சின்னம்மா இதை லக்ஷ்மியிடம் சொல்லியிருக்கிறார். அவள் இடிந்து போய் விட்டாள்."

"இது என்ன அநியாயம்? அவள் பச்சைக் குழந்தை மாதிரி இருக்கிறாளே!" என்றேன்.

"நான் உயிரோடிருக்கும்போது அப்படி நடக்கும்படி விட்டு விடுவேனா, துரை? மாமாவுக்கு இந்த ஜமீன்மீது காதல். லக்ஷ்மியை மணந்து கொண்டு விட்டால் மாப்பிள்ளையாக அதிகாரம் செய்து கொண்டிருக்கலாமென்று எண்ணம் போலிருக்கிறது."

"கேட்கவே பிடிக்கவில்லையே" என்றேன். லக்ஷ்மியின் மீது எனக்குச் சொல்ல முடியாத பரிவு ஏற்பட்டு விட்டது. அவளுக்குத் தகுந்த கணவனைத் தேடிக் கல்யாணம் செய்து கொடுத்துவிட நானே முயற்சி செய்ய வேண்டுமென்று கூடத் தோன்றியது.

மாலை நான்கு மணிக்குத் தங்கபாண்டியன் வந்து, "அந்த ராக்ஷஸன் வருவதற்கு முன்னால் லக்ஷ்மியை இன்னொரு தடவை பார்த்து விட்டு வரலாம் வா. மாமா வந்து விட்டால் நான்கூட அங்கே அதிகமாகப் போக முடியாது. போனால் என்ன பேசி விட்டேனோ என்று சந்தேகப்பட்டுச் சின்னம்மாவைப் பிடுங்கி எடுத்து விடுவார்" என்றான்.

நாங்கள் அங்கே சென்றதும் லக்ஷ்மி எங்களுக்குக் காப்பி கொடுத்து உபசரித்தாள். அப்போது அவளுடைய உபாத்தியாயினி சுசீலா தேவியும் இருந்தார். என்னை அவருக்கு அறிமுகப்படுத்தி வைத்த பின் கல்லூரி வாழ்க்கையைப் பற்றியெல்லாம் வேடிக்கையாகப் பேசிக் கொண்டிருந்தேன். எல்லோரும் என்னுடைய பேச்சை ரொம்ப அனுபவித்துச் சிரித்துக் கொண்டிருந்தார்கள்.

திடீரென்று தங்கபாண்டியன் சுசீலா தேவியைப் பார்த்து, "லக்ஷ்மிக்குச் சீக்கிரம் கல்யாணம் செய்து விடப் போகிறேன் அம்மா. அவளுக்குப் படிப்பு வராவிட்டால் நீங்கள் கவலைப்படாதீர்கள். அவளுக்குச் சொல்லிக் கொடுக்கிறவர்கள் சொல்லிக் கொடுத்தால்தான் படிப்பு மண்டையில் ஏறும்" என்றான்.

சுசீலா தேவி சிரித்துக் கொண்டே, "என்ன அப்படிச் சொல்லி விட்டாயே. லக்ஷ்மி இப்போது ரொம்ப நன்றாகப் படிக்கிறாளே. இந்த ஒரு வருஷத்தில் நிறையக் கற்றுக் கொண்டிருக்கிறாள். ஆனால் நீ சொல்லுவதிலும் உண்மை இருக்கத்தான் செய்கிறது" என்றார்.

உடனே அவர்களுடைய சின்னம்மா, "என்னமோ அப்பா! லக்ஷ்மியை நல்ல இடத்தில் கொடுத்து அவள் சௌக்கியமாக இருக்க வேண்டும். உங்களுடைய அப்பா இருந்தால் எவ்வளவோ உயர்வாக எல்லாம் நடக்கும். அப்படியெல்லாம் நாம் ஆடம்பரமாக ஒன்றும் செய்யா விட்டாலும் அவள் மனம் சிறிதும் கோணாமல் ஒரு நல்ல பிள்ளையாகப் பார்த்துக் கொடுத்து விட வேண்டும்" என்றார்.

"நீங்கள் இதைப் பற்றிப் பேசுவதாக இருந்தால் நான் போகிறேன்" என்று எழுந்தாள் லக்ஷ்மி.

"எதற்காக இப்படிக் கூச்சப்பட வேண்டும் லக்ஷ்மி? கல்யாண வயது அடைந்த பெண்களைப் பார்த்து எல்லோரும் அப்படித்தான் கூறுவார்கள். இந்துமதியைப் பற்றியும், அவள் கல்யாணத்தைப் பற்றியும் ஒரு சம்பந்தமுமில்லாத நான் கவலைப்படுகிறேன். உன்னைப் பற்றி உன் அண்ணா கவலைப்பட மாட்டாரா?" என்று சமாதானப் படுத்தினார் சுசீலாதேவி.

நான் சடாரென்று நிமிர்ந்து உட்கார்ந்தேன். அந்தப் பெயரைக் கேட்டதும் அவளைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டுமென்று தோன்றியது. நான் அவ்வாறு நினைத்தது எனக்கே வியப்பை அளித்தது. இதுவரையில் தோன்றாத ஒரு உணர்ச்சி என் இதயத்தில் சுரந்தது. 'அவளை உங்களுக்குத் தெரியுமா?' என்று கேட்க வாயெடுத்தேன். ஆனால் உடனே, 'ரங்கதுரை உனக்கு என்ன ஆகி விட்டது?' என்று என்னை நானே கேட்டுக் கொண்டு வாயை மூடிக் கொண்டேன். ஆனால் அந்தப் பெண்ணைப் பற்றி இன்னும் கொஞ்சம் பேசக் கூடாதா என்று மாத்திரம் தோன்றியது.

தங்கபாண்டியன் என் மனோரதத்தைப் பூர்த்தி செய்தான். "அந்த இந்துமதியைப் பற்றி நீங்கள் கவலைப்பட வேண்டியது ரொம்ப அவசியம்தான். இன்று காலையில் நாங்கள் இந்த ஊரின் எல்லைக்குள் நுழைந்ததும் அந்தப் பெண் காரின் அடியில் வந்து விழப் பார்த்தாள். கன்றுக்குட்டியைப் பிடிக்க அப்படியா ஓடி வருவது? இன்று பெரிய ஆபத்திலிருந்து தப்பினாள் என்று சொல்ல வேண்டும்" என்றான்.

# ஹாஸ்யக் களஞ்சியம்

## வாழ்க்கை விநோதம்














சுசீலாதேவி திகைத்துப் போய், "அப்படியா செய்தான்? ஒன்றும் அடிபட வில்லையே. இந்துமதி ரொம்பக் கெட்டிக்காரிதான். ஆனால் ரொம்பப் படபடத்த சுபாவம். நம் லக்ஷ்மி எவ்வளவு சாந்தமோ அவ்வளவுக் கவ்வளவு அவள் பரபரப்புக்காரி. நான் நாளைக்கு அவளை எச்சரிக்கிறேன்" என்றார்.

அவளைப் பற்றிய பேச்சு அத்துடன் முடிந்து விடப் போகிறதே என்ற எண்ணத்தினால், "வீட்டில் அவளுக்கு ஏதாவது சண்டையா? கோபித்துக் கொண்டு வந்து காரின் அடியில் விழுந்து விட நினைத்தாளோ?" என்று சிரித்துக் கொண்டே கூறினேன்.

ஏதோ பிரமாதமான ஹாஸ்யத்தைக் கேட்டு விட்டது போல் எல்லாரும் கலகலவென்று சிரித்தார்கள்.

சுசீலாதேவி, "அதெல்லாம் ஒன்று மில்லை. வீட்டுக்கு அவள் செல்லப் பெண். தாய் தகப்பனின் அருமைக் கண் மணி. ஆனால் கொஞ்சம் துருதுருப் புள்ளவள்" என்று கூறினார்.

"ஓஹோ! அவளுக்கு அப்பா அம்மா இருவரும் இருக்கிறார்களா?" என்று கேட்டு விட்டேன்.

தங்கபாண்டியன் குறுக்கிட்டு, "நான் தான் சொல்லி யிருக்கிறேனே துரை. சொந்த அப்பா இல்லை. பண்ணையார் மந்திரமூர்த்தி என்பவர்தான் அவளை யும், அவளுடைய தாயாரையும் பாது காத்து வருகிறார்" என்றான்.

அந்தச் சமயத்தில் வாசலில் ஏதோ சத்தம் கேட்டது. ஒரு ஆள் உள்ளே வந்து, "சின்ன ஜமீன்தார் வந்து விட்டார்" என்று கூறினான். தங்க பாண்டியனின் முகம் சிறுத்தது. எல் லோருடைய முக பாவமும் உடனே மாறிப் போய் விட்டது. நான் அந்தச் சமயத்தில் அங்கிருப்பது உசிதமில்லை என்று எனக்குப் பட்டதால் தங்க பாண்டியனைப் பார்த்து, "நான் ஊரைச் சுற்றிப் பார்த்து விட்டு வருகிறேன்" என்றேன். தங்கபாண்டியன் தலையை ஆட்டிக் கொண்டே என்னைத் தொடர்ந்து வந்தான். நாங்கள் வாச













"திருவாதிரை நாள் என்றால் களிப்பூட்டும் திருநாள் அல்லவா!"
"ஓ! திருவாதிரைக் களியைச் சொல்கிறீர்களா?"

ஊருக்கு வருவதற்கும் சொக்கையா எதிரில் வருவதற்கும் சரியாக இருந்தது.

சொக்கையாவை நெருங்கியபோது அவருடைய பார்வை எனக்கு வேட்டை நாயின் பார்வையை நினைவுறுத்தியது. 'இந்த மனிதனுடன் காலந் தள்ளுவது மிகக் கடினம்தான்' என்று எண்ணினேன். நாங்கள் அவரைத் தாண்டிச் சென்றோம். அவரும் ஒன்றும் எங்களிடம் கேட்கவில்லை. நாங்களும் பேசவில்லை. வெறித்த பார்வையுடன் அவர் சென்று விட்டார்.

நாங்கள் முன் பக்கத்து மாளிகையை நெருங்கியதும் தங்க பாண்டியன், "துரை! நீ போய் விட்டு நிதானமாய் வா. நான் அதற்குள் இங்கே எல்லா வற்றையும் சரி பண்ணி வைக்கிறேன்" என்று கூறினான்.

"நாம் அவர் வரும் போது அங்கே இருந்ததால் இன்னும் மோசமாகி விட்டதோ?" என்று நான் கேட்டேன்.

"அதெல்லாம் ஒன்றுமில்லை. நீ நிம்மதியாகப் போய் விட்டு வா" என்றான் தங்கபாண்டியன்.

"நீ தைரியமாக இரு. ஆனால் அவர் மனம் புண்ணாகும்படி ஒன்றும் பேச வேண்டாம்" என்று கூறி விட்டு நான் நேரே வாசலுக்கு வந்து விட்டேன். தங்கபாண்டியன் திரும்பிச் சென்றான்.

நான் ஊரையெல்லாம் சுற்றிப் பார்த்து விட்டு, மலை மீது ஏறினேன். ஆனந்தமாகச் சற்று நேரம் மலை மீது உலவி விட்டுத் திரும்பி வந்தேன். இருள் சூழ்ந்து வந்தது. மனத்தில் காலையில் பார்த்த இந்துமதியின் முகம் தோன்றிக் கொண்டே இருந்தது. 'என்ன களையான முகம்? என்ன அழகான கண்கள்? கண்களில்தான் எத்தனை துறுதுறுப்பு? அவளைப் போன்ற பெண்ணை நான் பார்த்ததே இல்லை' என்று நினைத்துக் கொண்டே இருந்தேன். திடீரென்று 'என்ன ரங்க துரை இது. இப்படி முன் பின் தெரியாத பெண்ணைப் பற்றி



பம்பாய், மாதுங்கா எஸ். ஐ. இ. எஸ். உயர்தரப் பள்ளியின் தலைமை ஆசிரியர் ஸ்ரீ பி. வி. பரமேசுவரய்யர் அவர்களின் புதல்வி சௌ. மகாலட்சுமிக்கும் ஸ்ரீ ஏ. சிவராமனுக்கும் சமீபத்தில் பம்பாயில் வெகு சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது. வாழ்க மணமக்கள்!

இவ்வளவு தூரம் சிந்தனை செய்கிறாயே' என்று ஒரு குரல் என் உள்ளத்திலிருந்து கேட்கும். எனக்கே ஒரே வெட்கமாய்ப் போய் விடும்.

'தங்கபாண்டியனின் தங்கை லக்ஷ்மியும்தான் பெற்றோர் இல்லாதவள். அவளிடமும்தான் உனக்குப் பரிவு ஏற்படுகிறது. இரக்கம் பிறக்கிறது. ஆனால் இந்துமதியைப் பற்றி அப்படியா இரக்கப்படுகிறாய்? வேறு மாதிரி இருக்கிறதே. அவளுடைய பெயரை எண்ணும் போது தூக்கிப் போடுகிறதே! இதயத்தில் ஏதோ சுரப்பது போல் தோன்றுகிறதே, அது என்ன?'' என்று என் அறிவு கேட்டது. அதற்குச் சமாதானம் கூற என்னால் முடியவில்லை.

இப்படியெல்லாம் நினைத்துக் கொண்டே நன்றாக அஸ்தமிக்கும் வரை சுற்றிக் கொண்டிருந்து விட்டு, வீட்டை நோக்கி வந்தேன். எதிரே சுசீலா தேவி வந்து கொண்டிருந்தார்கள். என்னைப் பார்த்ததும் சிரித்து விட்டு, ''இந்த ஊர் உனக்குப் பிடித்திருக்கிறதா?'' என்று கேட்டார்கள்.

''இந்த ஊரையும் பிடித்திருக்கிறது. இங்குள்ள மனிதர்களையும் ரொம்பப் பிடித்திருக்கிறது'' என்றேன். அப்படிச் சொல்லும் போது அந்த இந்துமதியை நினைத்துக் கொண்டுதான் கூறினேன்.

சுசீலா தேவி புன்னகையுடன், ''நீ எங்கள் வீட்டுக்குக்கூட வரவேண்டும். பாதிரித் தோட்டம், சிவப்புப் பங்களா என்று சொன்னால் எல்லாருக்கும் தெரியும்'' என்றார்.

''கட்டாயம் வருகிறேன்'' என்று கூறி விட்டுப் பிறகு தயக்கத்துடன்,

''தங்கபாண்டியன் வீட்டில் ஏதாவது ரகளை நடந்ததா?'' என்று சுசீலா தேவியாரிடம் கேட்டேன்.

''சற்று மாமாவும் மருமகனும் சத்தம் போட்டார்கள். எல்லாம் அடங்கி ஒரு மணி நேரம் ஆகி விட்டது'' என்று கூறி விட்டுப் போனார். நான் தயங்கியபடியே என் அறைக்குச் சென்றேன்.

அறையில் தங்கபாண்டியன் உட்கார்ந்திருந்தான். ஏதோ ஒரு புத்தகத்தைப் படித்துக் கொண்டிருந்தான். என்னைப் பார்த்ததும் புன்னகையுடன், ''மாமாவுக்குச் சரியான சூடு கொடுத்துச் சரி பண்ணிவிட்டேன் துரை!'' என்றான்.

''என்ன சொன்னாய்?'' என்றேன்.

''எனக்குப் பிடித்தமான சிநேகிதனை நான் அப்படித்தான் அழைத்து வருவேன். உங்களுக்குப் பிடிக்கா விட்டால் ஒரு மாதம் எங்காவது போய் இருந்து விட்டு வாருங்கள். அவன் ஒரு மாதம் இங்கு இருக்கப் போகிறான் என்றேன். அவர் ஒன்றுமே பேசவில்லை. நான் பேசிய விதத்தைக் கண்டு திகைத்துப் போய் விட்டார் என்று தோன்றியது. முதலில் ரொம்ப சத்தம் போட்டார். பிறகு அடங்கிப் போய் விட்டார்.''

''பாண்டியா! உன் மாமா உன்னைக் கண்டு பயந்து விடுவாரென்று எனக்குத் தோன்றவில்லை. 'புலி பதுங்குவது பாய்வதற்காகத்தான்' என்று நீ கேள்விப்பட்டிருக்கிறாயா? அவர் பின்னால் ஏதேனும் பெரிய சங்கடத்தில் உன்னை மாட்டி வைத்து விடப் போகிறாரே என்றுதான் எனக்கு மிகவும் கவலையாக இருக்கிறது.''

''அவரால் என்ன செய்துவிட முடியும்? நீ கவலைப்படாதே! நியாயம் நம் பக்கத்தில் இருக்கிறது. உனக்கு அரண்மனை வாசக சாலையைக் காட்டுகிறேன். ஏராளமான புத்தகங்கள் இருக்கின்றன. நாளைக்கு அந்த மந்திரமூர்த்திப் பண்ணையார் வீட்டுக்கு உன்னை அழைத்துப் போய் அறிமுகம் செய்து வைக்கிறேன். நீ உன் ஆராய்ச்சிகளைச் செய்து கொண்டு, அருவியில் பிரும்மானந்தமாய் ஸ்நானம் செய்து கொண்டு சந்தோஷமாக இரு. திருநந்திபுரத்தில் நமது வக்கீல் இல்லையாம். அடுத்த வாரம்தான் வருகிறாராம். காரியஸ்தர் கூறினார். அவர் வருவதற்குள் நீ உன் வேலைகளை முடித்துக் கொண்டு விட்டாயானால், வக்கீல் வந்ததும் அவரைக் கலந்து ஆலோசனை செய்து கொண்டு மேலே நடக்க வேண்டியவைகளைப் பற்றி யோசிக்கலாம்'' என்றான் தங்க பாண்டியன். (தொடரும்)

எவ்வயதிலும்
எந்த
நிலைமையிலும்

# இருமலை
# பெர்டுஸினல்
"டெஷ்னர்"
# நிறுத்துங்கள்



எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கிறது.

இடாபா லிமிடெட், ஷான், லீசென்ஸ்டைன் ஸ்விஸ் கன்டம் அண்டு இகனுமிக் டெரிடெரி இவர்களின் அனுமதியின் பேரில்




இன்பா லிமிடெட் தபால் பெட்டி 1041, பம்பாய்-1 இவர்களால் இந்தியாவில் தயாரிக்கப்பட்டது.

# சிவன் கீர்த்தனைகள்

ஸ்வர அமைப்பு: செம்மங்குடி சீனிவாச ஐயர்

கீர்த்தனை 16 ராகம்: ஸாரங்க சாப்பு தாளம்

### பல்லவி

ஞான சபையில் தில்லைக் கானகந்தனில் நின்றாடும்
ஆனந்த நட ராஜனே!
ஹர ஹர என வர முனிவரும் அமரரும் புகழ்—பர
மானந்த நட ராஜனே (ஞான)

### அனுபல்லவி

மானும் மழுவும் பிறை மதியும் நதியும் நவம்செய்
வானம் நிகர் சடையாட இளநகை
நவமாம் மதிமுகமும் திருவிழியழகுமாய் (ஞான)

### சரணம்

நேமியுடன் முழங்காழியணி
சாரங்கபாணி ம்ருதங்கமும்
நந்திஸதாபாரதீசர் ஸ்வர
நாத நாரதர் வீணையும்

ஸாம கான விநோதனே—சிவ
காம ஸுந்தரி நாதனே
ஸ்வாமி அடிமையை யான் ஸகல ஜகன்
நாதனே பாதமே தீம் தகிம் இசையுடன் (ஞான)

| மேளம் 65 | ஸ | | ரி | | க | | ம | ப | | த | | நி | ஸ் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|

ஸாரங்க ராகம் 65-வது மேளமாகிற மேச கல்யாணியில் பிறந்த ராகம், பாஷாங்க ராகம். ரக்தி ராகம். வக்ரஸம்பூர்ண ராகம். இது மாலை வேளையில் பாடுவதற்கேற்ற ராகமாகும்.

ஆரோஹணம்: ஸ ரி ஸ / பா ம ப த நி ஸ்

அவரோஹணம்: ஸ் நி த ப ம ரி க ம* \ ரி ஸ

இந்த ராகத்தில் மந்த்ரஸ்தாயி நிஷாதத்திற்குக் கீழும் தாரஸ்தாயி காந்தாரத்திற்கு மேலும் ஸஞ்சாரம் காணப்படவில்லை. ஸரிஸ / பாமரிகமபதநிஸ்—ஸ்நிஸ் \ தாபமரிகம* \ ரிஸ—ஸபமப \ காமபா—பமரிகம*பதநிஸ்ா—ஸ \ தாபமரிகம \ ரிஸ—ரிகம*ரிஸ * இந்த அடையாள மிட்டிருப்பது சுத்த மத்யமமாகும். மேற்கண்ட ஸஞ்சாரங்கள் ராகத்தின் உருவத்தை நன்கு விளக்கக் கூடியவை. மற்ற ஸஞ்சாரங்கள் லக்ஷ்யத்தில் கேட்டுப் பாட வேண்டும்.

* இந்த அடையாளம் சுத்த மத்யமத்தைக் குறிக்கும்.

/ இந்த அடையாளம் ஸ்வரத்தைக் கீழிருந்து மேல் ஸ்வரத்திற்கு இழுத்துப் பிடிப்பதைக் குறிக்கும்.

\ இது மேல் ஸ்வரத்திலிருந்து கீழ் ஸ்வரத்திற்கு இழுத்துப் பிடிப்பதைக் குறிக்கும்.

### பல்லவி

1 ; ; பா — பா ; ; பா | பா , பா க — மா ; பா ; ‖
ஞா ன ஸ பை யி ல் தி ல் லை

; ; பா — தா நீ ஸ்ா ; | நி ஸ் தா பா — ப ம ரி க ம* ரி ‖
கா னக் · த னி ல் · · நி ன்றா · · டு ம் ·

2 ஸா ; பா — பா ; ; பா | பா , பா , — ப ம த ப ப ம மா ‖
· ஞா ன ஸ பை யில் தில் · · · லை · ·

; ; பா — தா நீ ஸ்ா , ரி | நி ஸ் தா ப த — ப ம ரி க ம* ரி ‖
கா னக் · த · னில் · · நி · ன்றா · · டும் · ·



# தனிமை

ஜே. வஸந்தன்

ரயில் புறப்பட்டு வெகு தூரம் சென்று மறையும் வரையில் நான் அப்படியே நின்று கொண்டிருந்தேன். கண்ணுக்கு மறையும் மட்டும் சுமதி தலையை வெளியே நீட்டிக் கண்ணீர் நிறைந்த கண்களால் என்னைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

ஒருவரை விட்டொருவர் பிரிந்திருப்பது என்றால் அவ்வளவு கஷ்டமாக இருந்தது. அவளைப் பிறந்தகத்துக்கு அழைத்துப் போவதற்கு வந்திருந்த எனது மாமனார் கூட, அவள் கண்ணீர் வடிப்பதையும் நான் சோகமே உருவாக இருப்பதையும் கண்டு சிறிது வியப்படைந்தார்.

"சிறிது காலம் தானே பிரிந்திருக்கப் போகிறோம். அதிகம் போனால் ஒரு ஆண்டு. அப்புறம் அவள் வந்து விடுவாள். அவள் மட்டுமல்ல, நமக்கு ஒரு வாரிஸைம் கொண்டு வருவாள்" என்றெல்லாம் நான் என்னையே தேற்றிக் கொண்டிருந்தேன்.

என் முதுகில் பலமாக ஒரு அடி விழுந்தது. திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தேன்.

"தவம் கலைந்து விட்டதோ!" என்று சிரித்தான் சிவராமன். நான் பேசாமல் உட்கார்ந்திருந்தேன்.

"ஏனப்பா, உனக்கு வேறு இடம் கிடைக்க வில்லை என்று ரயில்வே ஸ்டேஷனில் தவம் செய்கிறாயாக்கும். ரயில்வே போலீஸ் எவனாவது பார்த்தால் லாக்கப்பில் அடைத்து விடப் போகிறான்" என்றான் மீண்டும் சிரித்துக் கொண்டு.

எனது நிலைமை நண்பனுக்குத் தெரியாமலில்லை. எதையாவது கேட்டு அழும் குழந்தைக்கு வேறு எதையாவது காட்டி ஏமாற்றுவது போல என்னை அவன் சிரிப்புக்காட்டி ஏமாற்ற முயன்று கொண்டிருந்தான்.

அது நடந்து இரண்டு மாதங்கள் கடந்து விட்டன. வேளா வேளைக்கு ஹோட்டலில் போய்ச் சாப்பிடுவது, காலையில் ஆபீஸுக்குப் போவது, மாலையில் திரும்பி வந்து சிறிது நேரம் காரில் ஊர் சுற்றிவிட்டு வருவது, இப்படியாக ஒரே மாதிரி கழிந்தன நாட்கள்.

ஒரு நாள் சிவராமன் வந்தான். சிவராமன் இருக்கும் இடத்தில் நிசப்தமே இருக்காது. அரட்டை அடிப்பதற்கு அவன் சரியான பேர்வழி. இருவரும் சிறிது நேரம் 'ஹாய்'யாகப் பேசிக் கொண்டிருந்தோம்.

"இதோ பார் ரவி, ஜானகியைப் பார்க்க வேண்டுமா உனக்கு?" என்றான் சிவராமன் திடீரென்று.

"ஜானகியா! யாரது?"

"நல்ல ஆளப்பா நீ! ஜானகியைத் தெரியாதா? நடன ராணி ஜானகி அப்பா!"

"ஓ அந்த ஜானகியா? அவளை......எப்படி?..." என்று இழுத்தேன்.

"அவள் நடனம் ஒன்று இருக்கிறது நாளை சாயந்திரம்..."

"ஓஹோ!"

"அதை நான் தான் ஒழுங்கு பண்ணியிருக்கிறேன். உனக்கு 'டிக்கெட்டு' தருகிறேன்" என்றான் சிவராமன்.

"சரி, நான் வருகிறேன்" என்றேன் குஷியாக. ஆனால் என் குரலில் இருந்த ஆர்வம் என் மனத்தில் இல்லை. "சுமதி இருந்தால் இருவரும் சேர்ந்து போயிருக்கலாம்" என்று மனத்துக்குள் எண்ணிக் கொண்டேன்.

அதை அப்புறம் மறந்து விட்டேன். மறு நாள் இரவு எட்டு மணியிருக்கும். நான் வீட்டில் உட்கார்ந்து பத்திரிகையொன்றைப் படிக்க முயன்று கொண்டிருந்தேன். சுமதி இல்லாததால் வீடு எப்படியோ இருந்தது. வீட்டில் இருக்கவே பிடிக்கவில்லை. அப்பொழுதுதான் சிவராமன் கூறியது ஞாபகத்துக்கு வந்தது.

உடனே எழுந்து காரில் புறப்பட்டேன். "விவேகவர்த்தினி" தியேட்டரில் நடனம் நடக்கப் போவதாகக் கூறியிருந்தான் சிவராமன். நான் "விவேக வர்த்தினி" தியேட்டரை அடைவதற்குள் நாட்டியம் ஆரம்பமாகி விட்டது.

சிவராமன் வாசலில் நின்று கொண்டிருந்தான். "கார் வைத்திருக்கும் நேரத்துக்கு வர முடியவில்லை துரைக்கு!" என்றான்.

"சரிதான். வழியை விடு!" என்றேன்.

* * *

எனக்கு நடனம், சங்கீதம் இவற்றிலெல்லாம் அளவுக்கு மீறிய மோகம் ஒன்றும் கிடையாது. எப்பொழுதாவது நான் கச்சேரிகளுக்குப் போவதுண்டு. இப்பொழுதும் உள்ளே போய் உட்கார்ந்தவுடன் நான் நடனத்தை ரஸிக்க ஆரம்பித்து விடவில்லை.

சுற்றிலும் பார்த்தேன். எனக்குத் தெரிந்தவர்கள் யாராவது கண்ணுக்குத்

தட்டுப் படுவார்களா என்று தேடினேன். அநேகமாக எல்லாம் புது முகங்கள். எனக்குத் தெரிந்த ஒன்றிரண்டு பேர் மேடை மீது வைத்த கண்ணை எடுக்காமல் நடனத்தை ரஸித்துக் கொண்டிருந்தனர். அதை உதாரணமாக எடுத்துக் கொண்டு நான் மேடையைக் கவனிக்க ஆரம்பித்தேன்.

ஜானகி நீலப்புடவை அணிந்திருந்தாள். ஒளி விளக்குகளுக்கு மத்தியில் அவள் தன்னை மறந்து ஆடிக் கொண்டிருந்தாள். முதலில் அரைக் கவனத்துடன் பார்த்துக் கொண்டிருந்தவன் ஐந்து நிமிடங்களுக்குள் நடனத்திலேயே லயித்து விட்டேன்.

அவளது ஒவ்வொரு அசைவிலும் கவர்ச்சி இருந்தது. நான் அதுவரை எந்த நடனத்தையும் அவ்வளவு ரஸித்ததில்லை. இடைவேளையின்போது சிவராமன் என்னருகில் வந்து உட்கார்ந்தான்.

“என்ன, நடனம் எப்படி?” என்று என்னைப் பார்த்துக் கேட்டான்.

“பிரமாதம்” என்றேன்.

“நாலு வயதுக் குழந்தையா யிருந்தபோதே அவள் நாட்டியம் பழகினாளாம். பின்னே கேட்கவா வேண்டும்!”

“எந்த ஊர்?” என்றேன் நான்.

“எந்த ஊராயிருந்தாலென்ன, இனிமேல் நம் ஊரில்தான் இருக்கப்போகிறாள்.”

“அப்படியா?”

“ஆமாம். இங்கே ஒரு வீடு எடுத்திருக்கிறாள். அது சரி, உன்னை அவளுக்கு அறிமுகம் செய்து வைக்கட்டுமா?” என்று என்னைக் கேட்டான் சிவராமன்.

சிறிது நேரம் நான் பேசவில்லை. பின்னர் “உம்” என்று பதிலளித்தேன். அதற்குள் இடைவேளை முடிந்து அடுத்த நடனம் ஆரம்பமாகி விட்டது.

நேரமாக ஆக அவள் நடனத்தில் வேகம்தான் தோன்றியதே தவிர களைப்புத் தோன்றவில்லை. ஒவ்வொரு நடனமும் முந்தியதைவிட நன்றாக இருந்தது. கடைசி நடனம் மிகவும் அற்புதமாக இருந்தது.

தலை கிறுகிறுக்கும் வேகத்தில் அவள் சுற்றினாள், குனிந்தாள், நிமிர்ந்தாள். அவளது கைகள் மின்வெட்டுகள் போல் நெளிந்தன. அந்த வேகத்திலும் அவள் கண்கள் சிரிப்பு, கோபம், சாந்தம் முதலிய உணர்ச்சிகளை அவ்வப்பொழுது வெளிப்படுத்திக் கொண்டிருந்தன.

பலத்த கரகோஷத்தினிடையே நடனம் முடிந்தது. அவள் கைகூப்பி வணங்கினாள். மறுபடியும் கரகோஷம். ரஸிகர்கள் கூட்டங் கூட்டமாய்க் கூடி அவளைப் புகழ்ந்து கொண்டிருந்தனர். எங்கும் ஒரே சந்தோஷ ஆரவாரம்.

சிவராமன் என் கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு போனான். அவள் மேடைக்குப் பின்னால் நின்று கொண்டிருந்தாள்.

“இவர்தான் மிஸ்டர் ரவி. பிரேமா டிரேடிங் கம்பெனியின் முதலாளி” என்று என்னை அறிமுகம் செய்தான் சிவராமன்.



அவளது புருவங்கள் சிறிது உயர்ந்தன. அந்தப் புருவங்களில்தான் என்ன கவர்ச்சி!

"நமஸ்தே" என்று கைகூப்பினுள். என்ன அழகிய கரங்கள்! அவள் தனது நகங்களில் சிவப்பு பூசி யிருந்தாள்.

நானும் "நமஸ்தே" என்றேன்.

சிவராமன் இடைவிடாது பேசிக் கொண்டிருந்தான். அவள் இடையிடையே முறுவலித்தாள். அவள் ஒவ்வொரு முறை முறுவலிக்கும் போதும் என் உடம்பு முழுவதிலும் ஏதோ ஒருவித உணர்ச்சி பரவியது.

"உங்கள் நடனத்தைப் பார்த்ததிலிருந்து ரவி நாட்டிய ரஸிகனுகி விட்டான்" என்முன் சிவராமன். அவள் சிரித்தாள். சிவப்பு உதடுகளிடையில் சில வெள்ளை முத்துக்கள் மின்னிவிட்டு மறைந்தன.

ஏதாவது சொல்ல வேண்டும் என்று நினைத்துப் பேச வாயைத் திறந்தேன். ஆனல் என்னல் பேச முடியவில்லை. என் நாக்கு மேல் வாயில் போய் ஒட்டிக் கொண்டது. நல்லவேளையாகச் சிவராமன் அங்கு இருந்தான். எனக்கும் சேர்த்து அவன் பேசினன்.

அவளதுமுகம் போல் நான் வேறெங்கும் கண்டதில்லை. அழகே உருவான அந்தச் சிவப்பு நெற்றியை மேலும் ஒருபடி அழகாக்க முயன்று கொண்டிருந்தது ஒரு திலகம். அவள் முகம் முழுவதிலும் இளமையின் மலர்ச்சி காணப்பட்டது.



இவ்வளவு அழகாக ஒரு பெண் இருக்க முடியுமா என்று நான் வியந்தேன். அசாதாரணமான இந்த அழகு என்னை மெதுவாகத் தனக்கு அடிமையாக்கிக் கொண்டிருந்தது.

"அடே, இப்படியே பேசிக் கொண்டிருந்தால் எப்படி? நீங்கள் வீட்டுக்குப் போக வேண்டுமே. நான் டாக்ஸியைக் கூப்பிடட்டுமா?" என்முன் சிவராமன்.

அவள் 'சரி' என்பதற்கு அடையாளமாகத் தலையை ஆட்டினுள். அப்பொழுது தான் நான் பேசினேன்.

"டாக்ஸி எதற்கு? என் காரிலேயே போய் விடலாமே!" என்றேன்.

"சரியான யோசனை" என்முன் சிவராமன் உற்சாகமாக. அவனுக்கு நான்கு ஐந்து ரூபாய் லாபம்!

இரண்டு நாட்கள் கழித்து, சிவராமனுடன் அவள் வீட்டுக்குப் போனேன். அன்று அவள் சரிகை போட்ட கறுப்புப் புடவை உடுத்தியிருந்தாள். ஆனல் புடவையைக் காட்டிலும் அவளது கண்கள் கறுப்பாக இருந்தன.

அன்றும் நான் பேசவில்லை. அவள் பேசினுள்; சிவராமன் பேசினன்.

அந்த இரண்டு நாட்கள்தான் நான் அவளைச் சந்தித்தது. ஆனல் அந்த இரு சந்திப்புகள் என்னுடைய மனத்தில் உண்டாக்கிய சலனம்!

எந்த நேரமும் ஜானகி என் மனக் கண்முன் தோன்றிக் கொண்டிருந்தாள். ஆபீஸில் உட்கார்ந்திருக்கும் போதுகூட அவள் நினைவுதான்.

குறையே இல்லாத அழகுடையபெண்ணை எப்படி ஒருவன் மறக்க முடியும்? மெதுவாக ஜானகி சுமதியின் இடத்தைப் பறித்துக் கொண்டிருப்பதை உணர்ந்தேன். ஜானகி என் மனதில் பெரிதாக ஆக, சுமதி சிறுத்து மங்கிக் கொண்டிருந்தாள்.

இது எனக்கே ஆச்சரியமாகத் தான் இருந்தது. எனது மண வாழ்வின் மூன்றாண்டுகளில் நான் இதுவரை இப்படி அவதிப்பட்டது கிடையாது. எத்தனையோ அழகிய பெண்களைப் பார்த்திருக்கிறேன். ஆனல் யாரும் என்னை இப்படி மயக்கிக் கலக்கியது கிடையாது.

* * *

நாட்கள் ஓடின. ஜானகி ஊரை விட்டுப் போய் விட்டாள். நான் எனது உள்ளத்தின் பாரத்தை ஒருவாறு தாங்கிக் கொண்டு அலைந்து கொண்டிருந்தேன்.



''ஹிந்து'' பத்திரிகையின் பங்களூர் பிரதிநிதியான ஸ்ரீ கே. எஸ். ராமசுவாமி அவர்களின் புதல்வன் ஸ்ரீ கே. ஆர். பாலசுப்ரமண்யனுக்கும் சௌ. பத்மாவதிக்கும் நவம்பர் 25ம் தேதியன்று கோயமுத்தூரில் சிறப்பாகத் திருமணம் நடந்தேறியது. நவம்பர் 30ம் தேதி பங்களூரில் நடந்த வரவேற்பு வைபவத்துக்கு மைசூர் பிரதம நீதிபதி, மைசூர் சபாநாயகர், சட்டசபை அங்கத்தினர்கள், மந்திரிகள், பிரமுகர்கள், பத்திரிகையாளர்கள் யாவரும் விஜயம் செய்து சிறப்பித்தனர்.

வாழ்க, மணமக்கள் !

அப்பொழுதுதான் எனக்கு ஒரு மகன் பிறந்திருப்பதாக என் மாமனாரிடமிருந்து தந்தி வந்தது. அந்தச் செய்திகூட என் நிலைமையைச் சரிப்படுத்தவில்லை. அடுத்த படியாகக் சுமதியும் குழந்தையும் வரப் போவதாக வந்த செய்தியும் என் மனத்தில் எந்த மாறுதலையும் புகுத்தவில்லை. சுமதியின் நினைவு இருக்க வேண்டிய இடத்தில் ஜானகியின் எழில் நிறைந்த தோற்றம் நின்று கொண்டு என்னைப் பார்த்துக் கவர்ச்சியுடன் புன்னகை புரிந்தது. அந்த மோகன உருவத்தின் தோற்றத்தில் கிறங்கிப் போய் என்னுடைய உள்ளம் சுற்றிச் சுழன்றது.

இன்னும் சில நாட்களில் சுமதியின் கடிதம் வந்தது. ஒருவாரத்திற்குள் சுமதியே வந்திறங்கினள். அவள் கைகளில் ஒரு சின்னஞ்சிறு சிவப்புக் குழந்தை; முகத்தில் ஒரு எழில் மிக்க புன்னகை.

ஒரு கணம் அப்படியே நின்றுவிட்டேன். சுமதி இவ்வளவு பெரிய அழகியா? இது வரை நான் கவனிக்காமலா இருந்தேன்! கண்களில் உவகை, உதடுகளில் புன்னகை; முகம் முழுவதிலும் தாய்மையின் பொலிவு.

சுமதியுடன் கதைகள் பேசுவதில் காலத்தைக் கழித்தேன். சுமதி இப்பொழுது என் கண்களுக்கு ஏதோ தேவதைபோன்று இருந்தாள்.

இந்தச் சமயத்தில் தான் ஜானகி ஊருக்குத் திரும்ப வந்திருக்கிறாள் என்று கேள்விப்பட்டேன். என் மனத்தைத் திகில் பற்றிக் கொண்டது. இப்பொழுது என் உள்ளத்தில் சுமதிதான் நிறைந்திருந்தாள். ஆனல் ஜானகியைப் பார்த்தால் மறுபடியும் பழைய நிலைமை ஏற்பட்டு விடுமே என்ற பயம் என் மன அமைதியைக் குலைத்தது. சுமதியின் முகத்தைப் பார்க்கும் போதெல்லாம் நான் திருடன் போல் விழித்தேன்.

இதுபோன்ற சமயங்களில்தான் எதிர்பாராதவைகள் நடந்து விடுகின்றன. ஒரு நாள் நான் சுமதியுடன் வெளியில் உலாவப் போயிருந்தேன். திரும்பி வந்து கொண்டிருக்கையில் எங்களெதிரே வந்தாள் ஜானகி. ''நமஸ்தே'' என்றாள் என்னைப் பார்த்தவுடன்.

நான் ஆச்சரியத்தால் ஸ்தம்பித்து விட்டேன். இந்த ஜானகிக்குத்தானு நாம் அடிமையாயிருந்தோம் என்று வியப்புக் கடலில் மூழ்கினேன். அதே ஜானகி தான்.

கூப்பியிருந்தவை அவளது கைகள்தான். அதே சிவப்பு வர்ணம். நெற்றியில் திலகம். நீலவர்ணப் புடவை. ஆனல் இப்பொழுது அவள் எனக்கு அசாதாரண அழகியாகத் தோன்றவில்லை.

ஜானகி சிறிதும் மாறவில்லை. நான்தான் மாறியிருந்தேன். அந்தக் கண்கள், அந்த சிவப்பு உதடுகள் அந்தக் கரங்கள் என் மனத்தில் எந்தவிதமான சலனத்தையும் ஏற்படுத்தவில்லை. பேச முடியாமல் நான் தத்தளிக்கவில்லை.

ஆனல் இதே கரங்கள், இதே கண்கள், இதே உதடுகள் தானே என்னை முன்பு அடிமையாக்கியிருந்தன! இவைதானே என் மனத்தில் அதிக நாட்கள் பதிந்து என்னைச் சித்திரவதை செய்தன. இப்பொழுது அவற்றின் வலிமை எங்கே போயிற்று?

குழப்பத்துடன் சிந்தித்தேன். திடீரென்று இந்த மாறுதலின் காரணம் எனக்குப் புலப்பட்டது.

இப்பொழுது சுமதி என்னருகில் இருந்தாள். சுமதி என்னுடன் இருக்கும்போது எத்தனை ஜானகிகள் வந்தாலும் என்னைக் கலக்கியிருக்க முடியாது. ஆனல் சுமதி இல்லாதபோது, நான் சுமதிக்காக ஏங்கிக் கொண்டிருந்தபோது இந்த ஜானகி அசாதாரண அழகியாகத் தோன்றினள். அவள் அப்படித் தோன்றியதன் காரணம் எனது தனிமைதான். நிம்மதியுடன் பெருமூச் செறிந்தேன்.

சுமதியும் ஜானகியும் நெடுநாளைய சிநேகிதிகள் போல் பேசிக் கொண்டிருந்தனர். பெண்கள் பேச ஆரம்பித்தால்தான் அதற்கு முடிவே கிடையாதே. நான் மெதுவாகச் சுமதியைக் கிள்ளி, 'வா போகலாம்' என்று சொல்வது போல் சைகை காட்டினேன்.

# புத்தம் புதியது-சுத்தமானது — ஏனெனில் இந்த பார்லி டின்னில் அடைக்கப்பட்டது!




ராபின்ஸன்ஸ் பெர்ல் பார்லி எப்பொழுதும் உங்கள் நம்பிக்கைக்கு உகந்தது. அது புஷ்டிமிக்க, உயர்ந்த ரக தானியங்களிலிருந்துத் தயாரிக்கப்பட்டு அவைகளின் புதுமையும் சுத்தமும் சிறிதளவும் கெடாவண்ணம் சுகாதார முறைப்படி காற்றுப்புகாமல் டின்களில் அடைக்கப்படுகின்றன. நோயாளிகள், குழந்தைகள், பாலூட்டும் தாய்மார்கள் முதலியவர்களுக்கு இது ஒரு முழு பாதுகாப்புள்ள உணவு.



## ராபின்ஸன்ஸ் பெர்ல்

**பார்லியையே கேட்டு வாங்குங்கள்**

**முற்றிலும் சுத்தமானது**

---



# பாவுஸேரி பெனிபிட் சிட் பண்டு லிட்.

*(இந்தியாவில் ஸ்தாபிக்கப்பட்டது)*

௩, சிங்கராச்சாரி தெரு, . . . . . திருவல்லிக்கேணி

தபால் பெட்டி நெ. 414 ⁂ மதராஸ் — 5

தந்தி: 'EVERMANS' . . . . . . . . . போன்: 85834

சேரக் கடைசி தேதி 11-1-1956 ... முதல் ஏலத் தேதி 13-1-1956

| 25<br>மாதங்கள் | மாதாந்திர சீட்டுகள்<br>(2வது வெள்ளிக்கிழமை ஏலங்கள்) | 25<br>அங்கத்தினர்கள் |
|---|---|---|

| வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை | வகுப்பு | மாதச் சந்தா | சீட்டுத் தொகை |
|---|---|---|---|---|---|
| B | ரூ. 100/- | ரூ. 2,500/- | E | ரூ. 20/- | ரூ. 500/- |
| C | ரூ. 50/- | ரூ. 1,250/- | F | ரூ. 15/- | ரூ. 375/- |
| D | ரூ. 25/- | ரூ. 625/- | G | ரூ. 10/- | ரூ. 250/- |

விலாசம் தெளிவாக எழுதிக் கேட்பவர்களுக்கு எங்கள் விதிகள் இலவசமாக அனுப்பப்படும். சீட்டில் அங்கத்தினர்களைச் சேர்த்துக் கொள்ளும் உரிமை பண்டைச் சேர்ந்தது.

(போர்டார் உத்திரவுப்படி) எம். வி. சுப்பிரமணியம், மானேஜிங் டைரக்டர்

## எங்கள் சேவை உங்களுக்குத்தேவை

**நேயர்களின் சௌகரியத்திற்காக R-6, பிளாக் நெ. 3, டெல்லி-ஆஜ்மீர்கேட் ஸ்கீம், புது டெல்லி என்னும் விலாசத்தில் எங்கள் கிளை ஆபீஸ் ஒன்று ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது.**

# கோதையின் காதல்

-வியாசஜி-

கோதை தன்னுடைய தம்பி வெங்கடேசனுடைய 'ரப் நோட்'டிலிருந்து ஒரு தாளைக் கிழித்தான். அதில் நான்கில் ஒரு பகுதியை மறுபடியும் இரண்டாகக் கிழித்து ஒரு சீட்டில் தப்புக்குறியும், மற்றொன்றில் 'சரி' என்பதற்கு அடையாளமான குறியும் எழுதினான். பிறகு இரண்டு சீட்டுக்களையும் சுருட்டினான். அக்கா செய்வதையெல்லாம் வியப்போடு பார்த்துக் கொண்டிருந்த வெங்கடேசனின் முன்பு இரண்டையும் குலுக்கிப் போட்டுவிட்டு ஏதாவது ஒன்றை எடுக்கச் சொன்னான். வெங்கடேசன் குதூகலத்துடன் ஒன்றை எடுத்து அவன் கையில் கொடுக்கும் வரைக்கும்கூட அவளால் பொறுக்க முடியவில்லை. அவன் கையில் ஒன்றை எடுத்தவுடனேயே அதை மிகுந்த ஆர்வத்துடன் பிடுங்கிப் பிரித்துப் பார்த்தான்.

சம்மணம் போட்டு உட்கார்ந்திருந்த வெங்கடேசன் சற்று எழும்பிக் கோதை சீட்டைப் பிரிப்பதை ஆவலுடன் பார்த்தான். அவன் எடுத்த சீட்டில் 'சரி' என்பதற்கான அடையாளக் குறி இருந்தது.

கோதையின் மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. அந்தச் சீட்டை அப்படியே கண்ணில் ஒற்றிக் கொண்டான். ஒரு கணத்தில் சிறு குழந்தையைப்போல் மாறித் தன்னுடைய கன்னத்தை மிகுந்த வாத்ஸல்யத்துடன் செல்லமாகத் தட்டி விட்டுக் குதித்துக்கொண்டே செல்லும் கோதையை ஆச்சரியத்துடன் பார்த்தான் வெங்கடேசன். அப்படி அந்தத் திருவுளச் சீட்டில் எதைப் பற்றி எண்ணிக் கொண்டு எழுதியிருப்பான் என்று யோசித்தான். அவனுடைய குழந்தை மனத்துக்கு ஒன்றும் விளங்காமற் போகவே மறுபடியும், "ஹுமாயூனுக்குப் பிறகு அக்பர் பட்டத்துக்கு வந்தார்" என்று தன் பள்ளிப் பாடத்தை விட்ட இடத்திலிருந்து படிக்கத் தொடங்கினான்.



★

ரங்கபாஷ்யம் இந்த முறை மீண்டும் நகரசபைத் தேர்தலுக்கு நின்றிருக்க வேண்டாம். அவர் மறுபடியும் நிற்கப் போகிறார் என்று தெரிந்தவுடனேயே அந்த வட்டாரத்தில் சில இடங்களில், குறிப்பாக இளைஞர்களிடையே அதிருப்திக் குரல்கள் ஒலிக்கத் தலைப்பட்டன. கடந்த நான்கு தடவைகளும் தொடர்ந்தாற்போல் அவர் வகித்து வந்த நகரசபை அங்கத்தினர் பதவியை இம்முறை வேறு யாருக்காவது விட்டுக் கொடுப்பதுதான் விவேகமான செயல் என்று சிலர் பகிரங்கமாகப் பிரஸ்தாபிக்கவும் செய்தார்கள்.

ஆனால் அதையெல்லாம் ரங்கபாஷ்யம் காதில் போட்டுக் கொள்ளவுமில்லை; அதைப் பற்றிக் கவலைப்படவும் இல்லை. ஆனால் அவருக்கு எதிராக நிற்கும் ஆனந்தரங்கத்துக்கு உதவியாகப் பிரசாரம் செய்வதற்குக் கண்ணபிரான் சென்றதுதான் அவருக்குக் கட்டோடு பிடிக்கவில்லை. கண்ணபிரான் அவருக்கு ஒரு விதத்தில் தூரத்து உறவு. பட்டதாரி. அதோடு மேடைகளில் அழகாகப் பேசுவான். கோதையை அவனுக்குக் கொடுத்து அவனை மாப்பிள்ளையாக்கிக் கொள்ளலாம் என்ற எண்ணமும் அவருக்கு உண்டு. தெரிந்தவர்களிடம் எல்லாம் அவனைத் தமது எதிர்கால மாப்பிள்ளை என்றே அவர் அறிமுகப்படுத்திக் கேலி செய்வார்.

பார்க்கப் போனால் கண்ணபிரானைத் தமக்கு ஆதரவாகப் பிரசாரம் செய்யப் பயன்படுத்திக் கொள்ளலாம் என்று ரங்கபாஷ்யம் நினைத்துக் கொண்டிருந்தார். அந்த நம்பிக்கையில் மண் விழுந்து விட்டதுமல்லாமல் 'பாவிப்பயல்' எதிர்க்கட்சியில் சேர்ந்தல்லவா வேலை செய்கிறான்?

கோதையைத் தனிமையில் சந்தித்த கண்ணபிரானிடம் அவன், "நீங்கள் அப்பாவுக்கு எதிராகத் தேர்தலில் வேலை செய்கிறீர்களாமே?" என்று கேட்டான்.

"என் கோதை, உனக்குக் கஷ்டமாக இருக்கிறதா?" கண்ணபிரானுடைய வார்த்தையில் தொனித்த எல்லையற்ற பரிவு அவளை என்னவோ செய்தது. அவளால் உடனே பதில் சொல்ல முடியவில்லை. கண்ணபிரானே தொடர்ந்து கேட்டான்: "நான் தப்புக் காரியத்தில் இறங்குவேன் என்று நீ நினைக்கிறாயா, கோதை?"

"நானா?" கோதையின் இந்தச் சுருக்கமான பதிலில் அவள் தன்னிடம் வைத்திருக்கும் நம்பிக்கை முழுவதையும் நொடிப் பொழுதில் உணர்ந்தான் அவன்.

"அதற்குச் சொல்லவில்லை கோதை! உன் அப்பா என்மீது மிகவும் ஆத்திரமடைந்திருக்கிறார் என்று எனக்குத் தெரியும். வெறுப்பு உணர்ச்சிக்கும் கசப்புக்கும் இடம் கொடுக்கக் கூடாது என்று கூடிய வரையில் நான் முயலத்தான் செய்தேன். முதலில் என்னுடைய நண்பன் ஆனந்தரங்கம் நிற்பதாகவே இல்லை. உன் தகப்பனாரே மறுபடியும் நிற்பது ஒரு சிலருக்கு விருப்பமில்லை என்று தெரிந்தவுடனே யே ஆனந்தரங்கமும் நானும் உன் அப்பாவிடம், 'எப்பொழுது இப்படி இரண்டு விதமான அபிப்பிராயம் ஏற்பட்டு விட்டதோ அப்பொழுதே நீங்கள் விலகிக் கொள்வதுதான் பெருந்தன்மையாக இருக்கும்' என்று பலமுறை சொல்லிப் பார்த்தோம்.



"அவரோ நாங்கள் சொன்னதைக் கேட்காதது மட்டுமல்ல, 'நம்முடைய இனத்தவர் வாக்குகள் மட்டுமே போதுமே நமக்கு' என்று பேசத் தொடங்கிய பொழுது எனக்கு உண்மையிலேயே உன் தகப்பனார் மேல் வெறுப்பே வந்து விட்டது. உனக்குத் தெரியும் கோதை, பொது வாழ்விலும் அரசியலிலும் நல்ல சம்பிரதாயங்கள் உருவாக வேண்டும் என்பதில் என்னைப் போன்றவர்கள் எவ்வளவு அக்கறை காட்டுகிறார்கள் என்று. அவர் இப்படிப் பேச ஆரம்பித்தவுடனேயே தீர்மானித்து விட்டோம் அவருக்கு எதிராக ஒருவரை நிற்க வைப்பது என்று. நானே நிற்பது நன்றாக இராது என்று என்னை வற்புறுத்தியவர்களிடம் சொல்லி விட்டேன். பிறகுதான் எனக்குப் பதிலாக ஆனந்தரங்கம் நிற்பது என்று முடிவாயிற்று."

கண்ணபிரான் சொன்னதை யெல்லாம் கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்த கோதைக்கு அவன் சொல்வதில் நியாயம் இருப்பதாகவே பட்டது. அவளுடைய தந்தைமீது ஓரளவுக்கு அவளுக்குக் கோபம் கூட வந்தது என்று சொல்லலாம். கண்ணபிரானுடைய நெருங்கிய கேண்மை காரணமாகத் தெரிந்தோ தெரியாமலோ கோதை அவனுடைய உயர்ந்த கொள்கைகளில் தானும் ஐக்கியமாகி விட்டாள். அநியாயத்தை எதிர்க்கும் மனப்பாங்கு அவள் உள்ளத்திலுள்ளும் வளர்ந்து விட்டது.

அவள் கண்ணபிரானிடம் சொன்னாள்: "நியாயம் உங்கள் பங்கில் இருக்கும்போது நீங்கள்தாம் வெற்றி யடையப் போகிறீர்கள். சந்தேகமேயில்லை. போகட்டும். உங்கள் செய்கையை நான் ஆதரிப்பேனா, மாட்டேனா என்ற சந்தேகம் உங்களுக்குத் தோன்றிற்று என்றால் இன்னும் என்னை நீங்கள் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை என்றுதானே அர்த்தம்?"

"என்னுடைய கோதையைப் பற்றி எனக்குத் தெரியாதா, என்ன? சும்மா விளையாட்டுக்கல்லவா கேட்டுப் பார்த்தேன்?"

"எங்கே, கோதை என்பதற்குமுன் என்ன சொன்னீர்கள்? இன்னொரு முறை சொல்லுங்கள். சரியாகக் காதில் விழவில்லை!"

கோதையின் பார்வையில் தெறித்த குறும்பைப் புரிந்து கொண்ட கண்ணபிரான், "ஊஹூம்! அதெல்லாம் சொல்ல முடியாது. பொன்னான மொழிகள் திரும்பவும் சொல்லப் படுவதில்லை" என்றான். அப்பொழுது அவன் முகத்தில் பொருள் பொதிந்த புன்முறுவல் விளையாடியது.

கண்ணபிரான் சென்ற பிறகு நெடு நேரம் வரைக்கும் அவனுடைய சொற்சாதுரியத்தை வியந்து கொண்டிருந்தாள் கோதை. அதே சொற் சாதுரியம் அவனுக்கு எப்படியும் வெற்றியை வாங்கித் தந்துவிடும். சந்தேகமில்லை. ஆனால் இந்தத் தேர்தல் விவகாரத்துக்குப் பிறகும் அவள் எப்படி 'அவனுடைய' கோதையாக இருக்க முடியும்? ஒருவேளை அவளுடைய தந்தை வெற்றிபெற்றால், அந்த மகிழ்ச்சியில் அவர் நடந்ததை மறந்து விடக்கூடும். 'கூடாது. கண்ணபிரானது கட்சிக்குத்தான் வெற்றி கிட்ட வேண்டும்' என்று விரும்பியது அவள் மனம். தனது சொந்தத் தந்தைக்கு எதிராகவே எப்படித் தன்னால் எண்ண முடிந்தது என்று அவளுக்கே சற்று ஆச்சரியமாக இருந்தது. எதற்கும் திருவுளச் சீட்டு எழுதிப் போட்டுப் பார்த்து விடுவது

என்று எண்ணித்தான் அப்படியே செய்யவும் செய்தான். வெங்கடேசன் எடுத்த திருவுளச் சீட்டில் கண்ணபிரான் பக்கம் வெற்றி நிச்சயம் என்றிருக்கவே அவன் மனம் ஆறுதல் அடைந்தது.

*

நகரசபைக் கட்டடத்துக்கு முன்பு ஒரே கூட்டம். பதிவான வாக்குகளைத் தொகுதிவாரியாக எண்ணிக் கொண்டிருந்தார்கள். துயரமாகட்டும், மகிழ்ச்சியாகட்டும்; அளவைத் தாண்டினால் வெறியின் எல்லையைத் தொட்டு விடுகிறதல்லவா? வெற்றி பெற்ற அபேட்சகர்களின் ஆதரவாளர்களின் உற்சாகம்—உற்சாகவெறி—பூமாலைக் குவியல்கள் மூலமாகவும் கோஷங்கள் மூலமாகவும் வெளிப்பட்டன.

தெருவில் கோஷம் கேட்டு மாடி ஜன்னலைத் திறந்து பார்த்தான் கோதை. ''ஆனந்தரங்கத்திற்கு ஜே'' என்ற கோஷம் காதைச் செவிடாக்கிற்று. கோதை எதிர்பார்த்த செய்திதான். என்றாலும் அந்தக் கணத்தில் வெற்றி முழக்கத்தைத் தெரிவித்த ஒலி அவர்களுக்கு ஏதோ மகத்தான சக்தி இருப்பதாகவே பட்டது அவனுக்கு. அவை செவிகளின் வழிப்புகுந்து அவனுடைய இதயம் முழுவதையும் இன்பத்தால் நிரப்பின. அது கண்ணபிரானுடைய வெற்றியல்லதான். இருந்தாலும் அவன் தானே அதற்குக் காரணமாக இருந்தவன், அந்த அளவுக்கு அது கண்ணபிரானுடைய வெற்றிதானே என்று எண்ணிய மாத்திரத்தில் அவன் உடம்பெல்லாம் புல்லரித்தது. தன்னை மறந்து துள்ளிக் குதித்தான்.

இரண்டாண்டுகளுக்கு முன்பு அவன் பள்ளி இறுதி வகுப்பில் படித்துக் கொண்டிருந்த பொழுது நடந்த ஆண்டு விழாவில் அவனுக்குப் பரிசு வழங்கப்பட்டது. நகரப் பிரமுகர்கள் எல்லாம் கூடியிருந்தார்கள். அத்தனை கூட்டத்துக்கு மத்தியிலும் இரண்டாவது வரிசையில் அமர்ந்திருந்த கண்ணபிரானை அவனுடைய கண்கள் தேடிக் கண்டுபிடித்து விட்டன. அவனைக் கண்ட பிறகு அந்தப் பெருங் கூட்டத்திலேயே அவனுடைய உருவம் மட்டும்தான் அவனுக்குத் தெளிவாகத் தெரிந்தது. அவனுக்கு அருகிலே இருந்த மற்றவர்களின் முகங்கள் கூட உருவமற்ற நிலையில் ஒரே மங்கலாகத் தென்பட்டன. 'இது என்ன விந்தை?' என்று அவன் அதைப் பற்றிப் பிறகு ஆச்சரியப்பட்டும் இருக்கிறான். அவன் பரிசு வாங்கும்போது கண்ணபிரானுடைய இரு விழிகளும் அவன் மீதே நிலைத்திருந்தன என்பதை அவனுடைய உள்ளுணர்வு சொல்லியது.

விழியும் விழியும் எதிர் பேசாத நிலையிலேயே, தனது முதுகுப்புறத்தில் அவ

னுடைய பார்வை லயித்திருக்கிறது என்ற உன்னுணர்ச்சியே அவனுடைய உடம்பில் அதிசயமும் இன்பமும் கலந்த ஒரு புல்லரிப்பை உண்டாக்கியது. இப்பொழுது அவன் அடைந்த மகிழ்ச்சி இரண்டு வருடங்களுக்கு முன்பு அவன் பள்ளியில் அடைந்த அதிசயமான அநுபவத்தின் மறு வெளியீடாகத்தான் தோன்றியது.

ரங்கபாஷ்யம் இரண்டு வாரமாக ஊரில் இல்லை. தேர்தல் முடிந்த மறுநாளே வெளியூருக்குப் புறப்பட்டுப் போனவர்தாம். திடுதிப்பென்று ஒருநாள் காலை திரும்பி வந்து அன்று மாலையே கோதையைப் பெண் பார்ப்பதற்காக யாரோ வரப்போகிறார்கள் என்று சொன்னபோதுதான் அவர் அவசரமாக வெளியூர் போனதன் காரணம் விளங்கியது. கோதை புழுவாய்த் துடித்தாள். 'பெண் பார்த்து விட்டுப் போனால் உடனே கலியாணமா என்ன, பார்த்து விட்டுப் போகட்டுமே' என்று பிறகு தேற்றிக் கொண்டாள்.

மாப்பிள்ளையாக வரப்போகிற வாலிபன் அவனுடைய உறவினர், நண்பர் ஆகிய இருவர் சகிதம் வந்து பெண்ணைப் பார்த்து விட்டுப் போனான்.

கிணற்றில் கல் போட்டதுபோல் கிட்டத் தட்ட இரண்டு மாதங்கள் சென்றுவிட்டன. பெண் பார்த்து விட்டுப் போனவர்களிடமிருந்து ஒருவிதத் தகவலும் வரவே இல்லை.

ரங்கபாஷ்யத்துக்குச் சீக்கிரமாகவே கோதையின் விவாகத்தை முடித்துவிட வேண்டும் என்று ஆத்திரம். குரோதம் அல்லவா மனுஷனை உந்தித் தள்ளியது. இடையில் கூடிய புதிய நகரசபைக் கவுன்சிலின் ஒரு தீர்மானம் அவரை ஓரேயடியாகத் திகைக்க வைத்துவிட்டது. அம்மாதிரி ஒரு தீர்மானம் வரக்கூடுமென்று அவர் கனவிலும் எதிர்பார்க்கவில்லை.

அவருடைய தொகுதியில் புதிதாகக் கட்டி முடித்திருந்த பூங்காவுக்கு அத்தொகுதி முன்னான் கவுன்சிலராகிய அவரைக் கௌரவிக்கும் வகையில் அவருடைய பெயரைச் சூட்டவேண்டும் என்று கவுன்சில் ஏகமனதாகத் தீர்மானித்தது. அந்தத் தீர்மானத்தின் மீது பேசியவர்கள் அத்தீர்மானத்தைக் கொண்டு வந்த ஆனந்தரங்கத்தின் பெருந் தன்மையை வெகுவாகச் சிலாகித்தார்கள்.

கண்ணபிரானும் ஆனந்தரங்கமும் தான் அந்த முயற்சிக்குக் காரணம் என்று அறிந்த போது ரங்கபாஷ்யத்தின் உடல் ஒரு சாணகக் குன்றி விட்டது. இடையில் அவசரப்பட்டுக் கோதையின் கலியாணத்துக்கு முயற்சி செய்த தம்முடைய முட்டாள்தனத்தை மிகவும் நொந்துகொண்டார். பார்த்து விட்டுப் போனவர்கள் 'சம்மதமில்லை' என்று தெரிவித்துவிட்டால்

நல்லது; தாம் இம்மாதிரி ஒரு முயற்சியில் இறங்கியதே வெளியாருக்குத் தெரியாமல் மறைத்து விடலாம் என்று எண்ணிக் கொண்டிருந்தார்.

பூங்கா திறப்பு விழா நிகழ்ச்சி தினத்தன்று வரைக்கும் அவருக்கு ஒரு பதிலும் வரவில்லை. குறைப்பட்ட நெஞ்சுடன்தான் விழாவில் கலந்து கொண்டார். ஜில்லா கலெக்டர் திறப்பு விழாவுக்குத் தலைமை வகித்தார். ரங்கபாஷ்யத்தின் சேவையைப் பாராட்டிப் பேசுபவர்களின் பட்டியலில் முதல் பெயர் கண்ணபிரானுடையது. அதைப் பார்த்தபொழுது அவருக்கு என்னவோ செய்தது. மேடைமீது அமர்ந்த வண்ணம் கூடியிருந்தவர்கள் மீது கண்ணை ஓட்டினார். முன் வரிசையில் கண்ணபிரானுக்கு அருகில் சிரித்துப் பேசிக் கொண்டிருந்த வாலிபனைப் பார்த்தபோது அவருக்குப் பகீரென்றது. கோதையைப் பார்த்து விட்டுப் போன வாலிபன்தான் அவன்.

விழா நிகழ்ச்சி முடிந்து இரவு வீட்டுக்கு வந்தபோது அவர் மனம் குழம்பிக் கிடந்தது. சிறிது நேரத்துக்கெல்லாம் வாயிலில் கார் வந்து நிற்கும் சப்தம் கேட்டது. தொடர்ந்து அந்த வாலிபன், அவனுடைய நண்பன், கண்ணபிரான், ஆனந்தரங்கம் எல்லோரும் உள்ளே வந்தார்கள்.

"என்ன நாயுடுகாரு. அன்று வந்து பார்த்துவிட்டுப் போன பிறகு எனக்கு ஓய்வே இல்லை. ஒன்றும் எழுத முடியாமல் போய் விட்டது. விட்டுப்போன கல்யாணப் பேச்சைத் தொடர்ந்து நடத்தத்தான் நாங்கள் வந்திருக்கிறோம்" என்று அந்த வாலிபனே பேச்சை ஆரம்பித்தான்.

ரங்கபாஷ்யத்தால் கண்ணபிரான் பக்கம் திரும்பிப் பார்க்கவே முடியவில்லை. அவனையும் வைத்துக் கொண்டு அவர் என்னத்தைப்பேசுவது?

"கண்ணபிரான்கூட உங்களுக்கு உறவு தானாமே. அன்றைக்கு வந்து விட்டுப் போன பிறகுதான் கேள்விப் பட்டேன். கண்ணபிரானும் நானும் கல்லூரியில் ஒன்றாகப் படித்தவர்கள். நான் எல்லாம் கேள்விப்பட்டேன். நடந்ததையெல்லாம் மறந்து விடுங்கள். கண்ணபிரானுக்கு என்றோ உடைமையாகி விட்ட விஷயத்தில் நான் இந்த அளவுக்குக் குறுக்கிட்டதற்கே நான் அவனிடம் மன்னிப்புக் கோர வேண்டும். கண்ணபிரானைப் போல ஒரு குணசாலியான மாப்பிள்ளை கிடைக்க நீங்கள் பாக்கியம் செய்திருக்க வேண்டும்" என்றான் சிரித்துக் கொண்டே.

ரங்கபாஷ்யத்துக்குப் பேச நா எழவில்லை. கதவுக்குப் பின்னால் மறைந்து நின்று கொண்டிருந்த கோதை மேலும் ஒட்டுக் கேட்க விரும்பவில்லை. மகிழ்ச்சிப் பெருக்குடன் சுவாமி அறைக்கு ஓடினாள். வெங்கடேசப் பெருமாள் படத்துக்கு அணிந்திருந்த மாலையிலிருந்து ஒரு மலரை எடுத்துக் கண்களில் ஒற்றிக் குழலில் சூட்டிக் கொண்டாள். பெருமாளின் பார்வையில் கனிவும், புன்னகையில் பரிவும் மிளிர்ந்ததாக அவளுக்குத் தோன்றியது.

# டி. கே. சி. யின் கடிதங்கள்

திருக்குற்றாலம்

13—7—45

நேரில் கேட்டிருப்பதால் கம்பர் தரும் காட்சிகளை அவ்வளவு நுட்பமாக அனுபவிக்க முடிகிறதென்றும், இப்போது நேரில் கேட்டு வருவதால் இனிப் பூரணமாய்க் கம்பர் பாடல்களை அனுபவிக்கலாம் என்றும் சொல்லுகிறீர்கள். வாஸ்தவந்தான். பாடல்களைக் கண்ணால் பார்ப்பதில் பிரயோசனம் இல்லை. எழுத்தாய் இருப்பது ஒலியாய்க் காதில் வந்து விழ வேண்டும். அப்போதுதான் சுவிரூபம் அந்த எழுத்துக்கு உண்டாகிறது. இந்த உண்மை தென்பட வேண்டும் என்றே கம்பர் பாடல்களைப் பாட வேண்டும்; வாய்விட்டுப் பாட வேண்டும் என்று சொல்லிக்கொண்டு இருக்கிறேன்.

ரசிகர் என்றால் தேன் வண்டைப் போல் அனுபவிப்பதுதான். மறுபடியும் மறுபடியும் புஷ்பத்தில் வந்து விழவேணும். கவியை விட்டு நம்மால் போக முடிகிறதா, இல்லை.

உண்மைக்கு ஒவ்வாததாய்க் கம்பர் வருணனைகள் இருக்கும் என்று இலக்கிய யாத்திரிகர்கள் சொல்லுகிறார்களே, தலையில் அடித்துக்கொள்ள வேண்டியதுதான்.

அன்புள்ள,

டி. கே. சிதம்பரநாதன்




# கள் வந்த கதை

ரிஷிகளெல்லாம் கூடி ஒரு மரத்தை சிருஷ்டி செய்தார்கள் தங்களுடைய அறிவைப் பின்வரும் மக்கட் சந்ததிக்காக எழுதி வைப்பதற்கு ஓலைகளைத் தரும் ஒரு மரத்தைத் தோற்றுவித்தார்கள். அந்த ஓலைகளில் மந்திரங்களையும், உபதேசங்களையும், தரும சாஸ்திரங்களையும் நன்றாக எழுதி வைத்து வந்தார்கள். வேதம், உபநிஷதம் மனுஸ்ம்ருதி முதலிய கிரந்தங்களை எழுத்தாணியைக் கொண்டு ஓலைகளில் எழுதினார்கள்.

பிறகு தாங்கள் ரொம்பப் படித்தவர்கள் என்று எண்ணிக் கர்வப்படும் பண்டிதர்கள் உண்டானார்கள். இந்த ஆணவம் பிடித்தவர்கள் ஒருவரோடு ஒருவர் சண்டையும் பிடித்தார்கள்.

"நீ முட்டாள்! நான் கெட்டிக்காரன்!" என்று ஒருவரோடொருவர் வாதம் செய்து சண்டை போட்டார்கள்.

இதைப் பார்த்து சரஸ்வதியம்மைக்கு ரொம்பக் கோபம் வந்து விட்டது. லக்ஷ்மீ தேவியுடன் யோசனை செய்து புலவர்களுக்கு ஓலை தரும் மரத்தைப் போதை உண்டாகும் மரமாகச் செய்து விட்டாள். ஓலைப் புஸ்தகங்களைப் படித்தால் எவ்வளவு அறிவு உண்டாகி வந்ததோ அந்த அளவில் அறியாமையும் மயக்கமும் உண்டாக்கும் கள்ளை அதே மரத்தில் மக்கள் உண்டாக்க ஆரம்பித்தார்கள். லக்ஷ்மீ கடாக்ஷத்தால் கள்ளை இறக்கி விற்கிறவர்கள் நிறையப் பணம் சம்பாதித்தார்கள். இன்னும் கள் உண்டாக்க ஆரம்பித்தார்கள். தென்னை மரத்தையும் அவ்வாறே பயன்படுத்தினார்கள்.

"ஐயோ, என் கர்ப்பத்தை அழித்து உயிரை உறிஞ்சுகிறார்களே!" என்று மரம் அழுகிறது. அப்படி அழுகிற கண்ணீரும் கர்ப்பம் சேதித்த உயிர் நீரும் பானையில் இறங்கிக் குடிக்கிறவர்களுக்குக் கள் ஆகிறது. அதைக் குடித்து அறிவை இழந்து போதையை அடைந்து சந்தோஷப்படும் மக்களைப் பார்த்துப் பரிதாபப் படாமல் சிலர் அதைஉண்டாக்கி உண்டாக்கி விற்றுப் பணம் பண்ணிப் பணக்காரர்கள் ஆகி வந்தார்கள்.

ஓலைகள் ரிஷிகளைத் தியானித்தன. "அறிவுக்குத் தோன்றினோம், போதைக்கு வளர்கிறோமே! நம் விதி இப்படி யாயிற்றே!" என்று ஓலைகள் காற்றில் தம் துயரத்தைச் சொல்லிக்கொண்டு வீசுகின்றன.

"தப்பிப் பிழைக்க எவ்வளவு உயரம் நீண்டு வளர்ந்தாலும், என் குழந்தைகளை எவ்வளவு உயரத்தில் வைத்துப் பாதுகாக்கப் பார்த்தாலும் இந்தப் பாவிகள் எப்படியோ ஏறி மென்னைப் பிடித்துக் கசக்கிக் கொல்லுகிறார்களே!" என்று அழுகிறது தாயுள்ளம் படைத்த மரம்.

"ஏறுவதற்கு ஆதாரமாகக் கிளைகள் விடாமல் நான் நூறு அடி வளர்ந்தாலும் இவர்கள் விடமாட்டார்களே! ஏதோ யுக்தி செய்து காலுக்கும் இடுப்புக்கும் கயிறு கட்டித் தொங்கியும் குரங்குகளைப்போல் ஏறுகிறார்களே! இது என்ன சாபம்!" என்று அழுகிறது. "எவ்வளவோ தவம் செய்து அறிவைப் பெற்றீர்களே! அதை இழப்பதற்கு இவ்வளவு யுக்தி செய்கிறீர்களே!" என்று பரிதவிக்கின்றன ஞான நூல் எழுதத் தோன்றிய ஓலைகள்.

என்ன அழுது என்ன பயன்? கள்ளை ஒழிக்க அரசாங்கத்தார் சட்டம் செய்தாலும் திருட்டுத்தனமாகச் சாராயம் சம்பாதித்துக் குடிக்கிறார்கள்.

ஆகாயத்தில் ரிஷிகள் இதையெல்லாம் பார்த்து வருத்தப்படுகிறார்கள். "இது சரஸ்வதி தேவியின் கோபத்தால் வந்த சாபம்" என்றார் ஒரு ரிஷி.

"படித்தவர்கள் ஆணவம் கொள்ளலாகாது படிப்பின் போதையும் கள்ளின் போதையைப்போலவே" என்றாள் லக்ஷ்மீ தேவி.

"தேங்காயை எனக்காக உடைக்கிறார்கள் மக்கள். ஆனால் ஆணவத்தை உடைக்கமாட்டோம் என்கிறார்களே! ஆணவத்தை உடைத்து உள்ளே இருக்கும் முற்றிய ஞானப் பருப்பைக் காண முயல்வதில்லை. இவர்களைவிட போதை அடைந்து கூத்தாடுகிறவர்களே மேல்" என்றார் கணபதி.

"நீ எப்போதும் இப்படித்தான் ஏதேனும் சொல்லுவாய்! போய்க் குளத்தங்கரையில் உட்கார்ந்து மக்களுக்கு நல்ல உபதேசம் செய். ஒருநாளில்லாமற் போனால் ஒரு நாள் நல்ல மதி அடைவார்கள்" என்றாள் கருணைக் கடலான லக்ஷ்மீதேவி.






அழ. வள்ளியப்பா

## 25. அதிசய விபத்து!

மூன்றாம் நாள் காலை மணி ஏழு இருக்கும். சாய்வு நாற்காலியில் சாய்ந்தபடி யோசனை செய்து கொண்டிருந்தார் மதுரநாயகம்.

அப்போது, " சார், மானேஜர் சார்!" என்று ஒரு குரல் கேட்டது.

"யாரது?" என்று கேட்டுக்கொண்டே எழுந்து வந்தார் மதுரநாயகம்.

" நான்தான் சார், சுதர்சனின் சிநேகிதன் பரமசிவம்" என்று சொல்லிக் கொண்டே உள்ளே வந்தார் பரமசிவம்.

பரமசிவத்தைப் பார்த்ததும், "என்ன பரமசிவம், சுதர்சனுக்கு ஏதோ அவசரத் தந்தி வந்ததாமே!" என்று மிகுந்த கவலையோடு பேச்சை ஆரம்பித்தார் மதுரநாயகம்.

" ஆமாம், சார்! அவருடைய ஒரே குழந்தை—ஆண் குழந்தை அநியாயமாக இறந்து விட்டது. உடம்புக்கு ஏதாவது வந்து இறந்திருந்தாலும் பரவாயில்லை. இப்படிக் குளத்திலா மூழ்கி இறக்க வேண்டும்?..."

" என்ன! குளத்திலே மூழ்கி இறந்து விட்டதா? அது எப்படி? ஒரு வேளை, அந்தக் குழந்தையின் தாய் படியிலே அதை உட்கார வைத்து விட்டுக் குளித்துக் கொண்டிருந்தார்களோ...?"

" இல்லை, இல்லை. அந்த விபத்து நடந்த விதமே ரொம்ப ஆச்சரியமானது. சுதர்சனுடைய கிராமம் இருக்கிறதே கீனூர், அதிலேயிருந்து பத்து மைல் தூரத்திலே ஒரு ஐயனார் கோயில் இருக்கிறது. அந்தக் கோயிலுக்கு அன்று அதிகாலையில் சுதர்சனின் மனைவி, அவன் அம்மா, தங்கை மூன்று பேரும் குழந்தையோடு இரட்டை மாட்டு வண்டி ஒன்றில் புறப்பட்டுப் போயிருக்கிறார்கள்.

"சாமி கும்பிட்ட பிறகு, கையுடன் கொண்டு போன பலகாரத்தைச் சாப்பிட்டு விட்டுப் பத்து மணிக்கெல்லாம் வண்டியில் திரும்பி வந்திருக்கிறார்கள். ஊருக்கு இரண்டு மைல் தூரத்தில் வரும்போதே, சுதர்சனின் குழந்தை 'தண்ணி, தண்ணி' என்று குடிப்பதற்குத் தண்ணீர் கேட்டு அழுதிருக்கிறது. 'அழாதேடா கண்ணு, இன்னும் கொஞ்ச நேரத்திலே வீடு வந்து விடும். வீட்டுக்குப் போனதும், வேண்டிய மட்டும் தண்ணீர் குடிக்கலாம்' என்று சொல்லிப் பார்த்திருக்கிறாள் சுதர்சனின் மனைவி. குழந்தை கேட்கவில்லை. திரும்பத் திரும்ப அழுதிருக்கிறது.

"ஊருக்கு அரை மைல் தூரத்திலே ஒரு குளம் இருக்கிறது. அந்தக் குளத்திலிருந்துதான் கீனூர் ஜனங்களெல்லாம் குடிக்கத் தண்ணீர் எடுத்துச் செல்வது வழக்கமாம். வண்டி அந்தக் குளத்தின் அருகே வந்ததும், 'சர், இவன் சொல்லக் கேட்கமாட்டான். வண்டியை நிறுத்தப்பா' என்று சொல்லியிருக்கிறாள் சுதர்சனின் அம்மா.

"வண்டிக்காரன் வண்டியைக் குளத்தின் அருகே ரஸ்தாவில் நிறுத்தியிருக்கிறான். உடனே, சுதர்சனின் அம்மா பலகாரம் கொண்டு போன பாத்திரத்தை எடுத்துக் கொடுத்துக் குளத்திலே கொஞ்சம் தண்ணீர் எடுத்து வரச் சொல்லியிருக்கிறாள். அந்தக் குளத்துக்குச் சுற்றுச் சுவர் எதுவும் கிடையாது. படிகளும் இல்லை. எந்தப் பக்கமாக வேண்டுமானாலும் இறங்கலாம். சரிவாக இருக்கும். வண்டிக்காரன் அந்தச் சரிவில் இறங்கித் தண்ணீர் எடுத்துக்கொண்டிருந்திருக்கிறான். அந்தச் சமயத்தில்தான், அந்த எதிர்பாராத விபத்து நடந்து விட்டது!..."—பரமசிவம் இதைக் கூறிச் சிறிது நேரம் நிறுத்தினான்.

அதற்குள் மதுரநாயகம், " அந்தச் சமயத்தில்தான் விபத்து நடந்ததா? வண்டிக்குள்ளிருந்த குழந்தை எப்படிக்

குளத்தில் விழுந்தது?'' என்று ஆச்சரியத்துடன் கேட்டார்.

''வண்டிக்காரன் தண்ணீர் எடுக்கச் சென்ற போது மாட்டுக் கயிற்றை யாரிடத்திலாவது கொடுத்து விட்டுப் போயிருக்கக் கூடாதா? எல்லாரும் பெண்களாகவே இருந்ததால், கொடுக்கவில்லை போலிருக்கிறது. அவன் உட்காரும் இடத்தில் கயிற்றை வைத்து விட்டுப் போயிருக்கிறான். வண்டியில் பூட்டப்பட்டிருந்த மாடுகள் இரண்டுக்கும் நல்ல தாகம். அதனால், அவை தண்ணீர் குடிக்க நினைத்துத் திடீரென்று சரிவு வழியாகக் குளத்திலே இறங்கி விட்டன! உடனே, 'ஐயோ! ஐயையோ!' என்று வண்டிக்குள் இருந்தவர்கள் கத்தியிருக்கிறார்கள். சத்தத்தைக் கேட்டதும் தண்ணீர் எடுத்துக் கொண்டிருந்த வண்டிக்காரன் கையிலிருந்த பாத்திரத்தைக் கீழே போட்டு விட்டு வண்டியின் முன் பக்கத்தைப் பிடித்து நிறுத்தப் பார்த்திருக்கிறான். சரிவாக இருந்ததால், அவனால் நிறுத்த முடியவில்லை. அவனையும் தண்ணீரில் தள்ளி விட்டு வண்டி குளத்துக்குள் இறங்கி விட்டது!''

இதைப் பரமசிவம் கூறியதும், ''ஐயோ! அப்படியானால், எல்லாருமே வண்டியோடு குளத்துக்குள் போயிருப்பார்களே!'' என்று திகிலுடன் கேட்டார் மதுரநாயகம்.

''ஆமாம்! குளத்துக்குள் வண்டி இறங்கியதும், மாடுகள் இரண்டும் தண்ணீரைக் குடித்தபடி நீந்திக் கொண்டிருந்திருக்கின்றன. வண்டிக்குள்ளேயும் தண்ணீர் சென்று விட்டது. உடனே வண்டி கொஞ்சம் கொஞ்சமாக உள்ளே அமுங்க ஆரம்பித்திருக்கிறது. வண்டிக்குள்ளே இருந்தவர்கள் தப்ப வழி தெரியாமல் பயங் கொண்ட மட்டும் கதறியிருக்கிறார்கள். அப்போது தண்ணீரில் விழுந்த வண்டிக்காரன் எப்படியோ சமாளித்துக் கொண்டு வண்டியின் பின்புறமாக வந்திருக்கிறான். அதே சமயம் ஊரிலிருந்து அந்தப் பக்கமாக ஒரு வண்டி வந்திருக்கிறது. சத்தம் கேட்டதும் அந்த வண்டியிலிருந்த நாலைந்து பேர் கீழே இறங்கி ஓடி வந்திருக்கிறார்கள். அவர்கள் வந்த வேகத்தில் குளத்திலே குதித்துப் பெரியவர்கள் மூவரையும் கரை சேர்த்து விட்டார்கள். ஆனால் குழந்தை—? 'ஐயோ என் குழந்தை!' என்று சுதர்சனின் மனைவி அலறியதைக் கேட்டதும், வண்டிக்காரன் நீரிலே பாய்ந்து வண்டிக்குள் தேடியிருக்கிறான். அவனுடன் உதவிக்கு வந்தவர்களும் தேடிப் பார்த்திருக்கிறார்கள். சுமார் மூன்று மணி நேரம் தேடிய பிறகுதான் இறந்து போன குழந்தை கிடைத்திருக்கிறது.''

இவ்வளவு நேரமாகப் பரமசிவம் கூறியதைக் கேட்டுக் கொண்டிருந்த மதுரநாயகத்தின் கண்கள் கலங்கிவிட்டன. ''பாவம், எவ்வளவு மோசமான விபத்து! அந்தக் குழந்தை ஒரு வாய் தண்ணீர்தான் குடிக்கக் கேட்டது. இப்படி ஒரு குளத்துத் தண்ணீரும் சேர்ந்து குழந்தையின் உயிரையே குடித்து விட்டதே! பாவம், சுதர்சன் எவ்வளவு நல்லவன்! அவன் மிகவும்வருத்தப்படுவான்.''

''வருத்தப்படுவதோடு இருந்தாலும் பரவாயில்லையே! மூளையே கலங்கிப் பைத்தியம் பிடித்துவிடும் போலிருக்கிறதே! அதுதான் பயமாயிருக்கிறது!''

''என்ன! பைத்தியம் பிடித்து விடும் போலிருக்கிறதா?''

''ஆமாம். அன்றைக்குத் தந்தி வந்தவுடனேயே அவன் மூளை குழம்பி விட்டது! அவனை வழியனுப்பப் போயிருந்த போது, அவன் நிலைமையைப் பார்த்து இந்த நிலையில் அவனை விட்டு வர மனமே இல்லை. அதனால் தான் மறுநாளே திரும்பி வராமல் இன்று வந்தேன். சரி, நான் வரட்டுமா? ஸ்டேஷனிலிருந்து நேராக இங்குதான் வருகிறேன். ரமணி என்கிற பையனுடைய படத்தைப் போடப் போவதாகச் சுதர்சன் சொல்லிக் கொண்டிருந்தான். அப்போதுதான் தந்தி வந்தது. உங்களுக்குத் தகவல் தெரியாதே என்று சொல்ல வந்தேன்.''

''எல்லாம் என் துர் அதிர்ஷ்டம்'' என்று வருத்தப்பட்டார் மதுரநாயகம்.

''நான் போய் வருகிறேன்'' என்று கூறிவிட்டுப் பரமசிவம் போனதும், 'சுதர்சன் இனி எப்போது திரும்பி வருவானோ! ரமணியின் படம் எப்போது தயாராகுமோ!' என்று எண்ணிப் பெருமூச்சு விட்டார் மதுரநாயகம்.

ஐந்து நிமிஷம் அப்படியே யோசனையில் இருந்தார். ஆறாவது நிமிஷம் நாடகக் கொட்டகையிலிருந்து ஒரு ஆள் அவசர அவசரமாக அங்கே ஓடிவந்தான். ''சார், சார், தந்தி வந்திருக்கிறது சார்'' என்று கூறிக்கொண்டே அவரிடம் தந்தியை நீட்டினான். அவர் தந்தியை வாங்கிப் பரபரப்புடன் பிரித்துப் படித்துப் பார்த்தார். உடனே, இருந்த இடத்தை விட்டு ஒரு குதி குதித்தார். பிறகு, ''கமலா! கமலா!'' என்று கத்திக் கொண்டே அடுக்களைக்கு ஓடினார்.

(தொடரும்)

"பிரபலமானதும் நன்கு
வினியோகிக்கப்படுவதும்"

என்கிறார் உலக
மறிந்த ஒரு பிரிட்டிஷ் சாக்
லேட் உற்பத்திசாலை
டைரக்டர்
ஸாடே பால் சாக்லேட்




ஒருமுறை
இந்தியாவின் சொந்த சாக்லேட்டு
களை ருசித்து நம்பிக்கை பெறுங்கள்

No. 51.




## 38. உயிர் விளையாட்டு

"கொள்ளுப் போட்டா என்ளு விளையும்
— எங்க காட்டிலே
கோழி வந்து குட்டி போடும்
— எங்க வீட்டிலே
கடலை போட்டா நெல்லு விளையும்
— எங்க காட்டிலே
கடுவம் பூனை குட்டி பூடும்
— எங்க வீட்டிலே
அவரை போட்டாத் துவரை விளையும்
— எங்க காட்டிலே
ஆனை போடும் பூனைக் குட்டி
— எங்க வீட்டிலே"

மேற்கண்ட பாடலைச் சொக்கி குடியின் மந்திரக் கன்னி, மகேந்திர மோகினியான சொக்கி பாடிக்கொண்டே கோமாளிக் கூத்தை முடித்தாள். அந்தப் பாடல் டாக்டர் சுரேஷின் உள்ளத்தை விட்டு அகலவே இல்லை. உண்மையில் அவர் திருச்சிக்கு வந்த பிறகும் கூட அந்தப் பாடல் ஒலித்துக் கொண்டேயிருந்தது.

ஆமாம்: சொக்கிகுடியிலிருந்து மூன்றிய நான் தான் டாக்டர் சுரேஷ் திருச்சிக்கு வந்திருந்தார். அவருடைய ஏற்பாட்டின் பேரிலேதான் கல்யாணி அம்மாளும் கனக சுந்தரமும் வால்குடியிலிருந்து சுரேஷின் வீட்டுக்கு வந்திருந்தார்கள். ஆனாலும் சந்திரிகாவும் கல்யாணி அம்மாளும் அங்கே சந்திக்கக் கூடும் என்பதை யாரும் எதிர்பார்க்கவில்லை.

"என்ன சந்திரிகா! மேலே நடக்கலாமா?" என்று கேட்டாள் சாவித்திரி அம்மாள், திகைப்பிலிருந்து விடுபட்டவளாக. சந்திரிகா இன்னும் சுவாதீனத்துக்கு வரவில்லை. அப்படியே நின்றாள்.

"என்ன சந்திரிகா! நானுந்தான் முதலில் திகைத்தேன். ஆனாலும் சமாளித்துக் கொள்ள வேண்டாமா? கல்யாணி அம்மாள் என்ன பேயா பூதமா! ஏன் இப்படி நடு நடுங்குகிறாய்! வா உள்ளே போகலாம்!"

"அம்மா! அவள் பேயாகவோ பூதமாகவோ இருந்திருந்தால் பயப்படாமல் தைரியமாக இருப்பேன். ஆனால் கல்யாணி அம்மாள் உண்மையிலேயே மிகவும் நல்லவள். அதனால்தான் இத்தனை கஷ்டப்படுகிறேன்!"

"சரி சரி! புரியாமல் பேசுவது தம்பி ராமநாதனுக்குத்தான் வழக்கம். உனக்கும் அந்த வாசனை அடித்து விட்டதா! வா வா! உள்ளே போகலாம்! இதோ நம்மைப் பார்க்கிறார்கள் அவர்கள்!"

இப்படிச் சொல்லிக் கொண்டே ட்ரைவரைச் சாமான்களை எடுத்



துக் கொண்டு உள்ளே வரும்படி கூறினுள் சாவித்திரியம்மாள்.

"இல்லே அம்மா! சாமான்கள் காரிலேயே இருக்கட்டும். டாக்ஸியும் கொஞ்ச நேரம் காத்திருக்கட்டும். நாம் உள்ளே போய் விட்டு வரலாம்!" என்று சொல்லிப் பங்களாவுக்குள்ளே நடந்தாள் சந்திரிகா.

பண்ணேயார் கனகசுந்தரம் நாற்காலியை விட்டு எழுந்தார். சாவித்திரி அம்மாளும் சந்திரிகாவும் கை கூப்பினர்கள். கல்யாணி அம்மாள் அப்படியே ஸ்தம்பித்துப் போய் நின்று கொண்டிருந்தாள்.

யாரும் எதிர்பாராத விதமாக விறுவிறு என்று நடந்து சென்ற சந்திரிகா கல்யாணி அம்மாளின் காலிலேபோய் விழுந்து நமஸ்காரம் பண்ணினுள். கல்யாணி அம்மாளுக்குக் கண்ணீர் வந்தது.

"அம்மா! என்னே மன்னிக்க வேண்டும். நினைத்து அறியாமல் பெரிய தவறு செய்து விட்டேன். இனிமேல் என்னல் எந்த விபரீதமும் ஏற்படாது! இது சங்கே சாட்சியாக சத்தியம்!"

இப்படிச் சொல்லும் போது சந்திரிகாவினுடைய குரல் எல்லாம் நடுங்கியது. உதடுகள் படபடத்தன.

"சந்திரிகா! எழுந்திரம்மா! என்ன இது? எழுந்திரு!" என்ருர் கனகசுந்தரம்.

கல்யாணி அம்மாள் அளவு மீறிய துக்கத்தினல் என்ன சொல்லுவது என்று புரியாமல் அப்படியே கண்ணீரும் விம்மலுமாகச் சுவரிலே சாய்ந்த வண்ணம் நின்ருள்.

"உட்காருங்கள் அம்மா! நிற்கிறீர்களே!" என்ருர் கனகசுந்தரம் சாவித்திரி அம்மாளைப் பார்த்து.

இந்தச் சந்தர்ப்பத்தில் பங்களாவுக்கு வெளியே இன்னெரு கார் வந்து நின்றது. டாக்டர் சுரேஷ் இறங்கி வந்தார்.

"அடாடா! பேஷ் பேஷ்! பலே!" என்று சொல்லிய வண்ணம் சாவித்திரி அம்மாளேயும் சந்திரிகாவையும் டாக்டர் சுரேஷ் உத்சாகமாக வரவேற்றுக் கொண்டே, கனகசுந்தரத்தைப் பார்த்துச் சொன்னர்: "நீங்களும் கல்யாணி அம்மாளும் புறப்படுவதற்கு இன்னும் ஒரு மணி நேரம் சாவகாசம் இருக்கிறது. அதற்குள் சாப்பிடுங்கள். மலே மேலே நடக்க வேண்டியதிருக்கும். கொஞ்சம் பலமான ஆகாரமாகக் கையில் ஒரு பார்ஸலும் எடுத்துக் கொள்ளுங்கள். கந்தப்பனேடு இங்கே வந்திருக்கிற இரண்டு பயில்வான்கள் உங்களுக்குத் துணையாக உங்களோடு வருவார்கள்."

இப்படிச் சொல்லிக் கொண்டே சந்திரிகாவைப் பார்த்துக் கூறுவார்: "சந்திரிகா! நீ திருச்சியில் தங்கியிருப்பதற்கு வேண்டிய எல்லா ஏற்பாடுகளும் செய்து விட்டேன். நீங்கள் இருவரும் இங்கே புறப்பட்டு வருகிறீர்கள் என்று பம்பாயிலிருந்து ராமநாதன் கொடுத்த தந்தி ராத்திரிதான் கிடைத்தது. அதன்பேரில் காலேயில் மலேக்கோட்டைக்குப் போய் எல்லா ஏற்பாடுகளும் செய்து விட்டு வருகிறேன். அப்புலிங்கம் வீட்டில் அதே பழைய அவுட் ஹவுஸில் நீயும் சாவித்திரி அம்மாளும் சௌகரியமாக ஒரு வாரமாவது இருக்கலாம். என்ன அம்மா! சாவித்திரி அம்மாள் ஏன் இப்படித் திகைப்போடு பார்க்கிறீர்கள்! ஒரு வாரத்துக்குமேல் தங்கவேண்டி வந்தாலும் வரலாம். எல்லாம் விவரமாகச் சொல்லு





கிறேன். என்னை உங்களுக்குப் பிடிக்க வில்லை. ஏதோ துப்பறியும் புலி என்று என்னை நீங்கள் சந்தேகிக்கலாம். பரவா யில்லை. நான் துப்பறிவதிலே மட்டு மில்லை, வைத்தியத்திலுங்கூட சாதாரண ஆசாமிதான். புலியில்லை!''

சாவித்திரி அம்மாளுக்கு முகம் எல்லாம் வெட்கத்தினால் சிவந்தது. டாக்டர் சுரேஷ் மேலும் பேசினார்:

''உங்களைப் பற்றி எனக்கு நன்றாகத் தெரியும். புதிய மனிதன் என்று என் னிடம் அன்னிய மனிதர்களைப் போல் நடந்து கொள்ளாதீர்கள். ராமநாதன் உங்களுக்குத் தம்பி என்றால், நான் உங்க ளுக்கு அண்ணன் என்று நினைத்துக்கொள்ள வேண்டும். தெரிந்ததா? என்ன சந்திரிகா, டாக்ஸி ஏன் வெளியே காத்திருக்கிறது?''

டாக்டர் சுரேஷ் சாமர்த்தியமாகச் சம்ப வங்களை இயக்கிக் கொண்டிருந்தார்.



''டாக்ஸியை வேண்டுமானால் அனுப்பி விடலாம். என்னுடைய காரிலேயே நீங்கள் இருவரும் அப்புலிங்கத்தின் வீட்டுக்குப் போகலாம். எதற்கும் முதலில் நீங்கள் எல்லாரும் உள்ளே போய் ஸ்நான பானாதி களை முடித்துக் கொண்டு—''

சந்திரிகாவின் முகத்தில் கலவரம் ஏற் பட்டது. இதற்குள் கல்யாணி அம்மாள் உள்ளே போய் ஒரு நாற்காலியில் உட் கார்ந்து கொண்டு விம்மி அழுகிற குரல் நன்றாகக் கேட்டது.

'யார் கல்யாணி அம்மாளா! என்னம்மா! உங்களுக்காகவா அவர்களை இப்பொழுது வெளியே அனுப்புகிறேன். இல்லவே இல்லை. உங்களுடைய மனமாற்றம் எனக் குத் தெரியாதா என்ன! நன்றாகத் தெரி யும். அதற்காக இப்படி ஒரு ஏற்பாட் டைச் சொல்லவில்லை. நான் சொல்வது—''

உள்ளே இருந்த கல்யாணி அம்மாள் விறுவிறு என்று நடந்து வந்தாள். யார் தடுத்தும் கேளாமல் அப்படியே டாக்ட ருடைய பாதங்களிலே வந்து விழுந்தாள்.

''டாக்டர்! நீங்கள் எனக்கு வயதில் மூத்தவர். உங்களை நமஸ்காரம் பண்ணு வது புண்ணியந்தான். என்னைத் தடுக்கா தீர்கள். நீங்கள் என்ன ஏற்பாடு செய்தா லும் சரி. என்னுடைய மஞ்சளுக்கு உயிர்ப் பிச்சை கொடுத்தால் அதுவே போதும். அவர் உடம்பு குணமாகி விட்டால் சரி. என்னை வையட்டும். என்னை அடிக்க வேண்டுமானாலும் அடிக்கட்டும். அவ ருடைய உடம்புக்கு ஒன்றுமில்லாமல் சௌகரியமாக இருக்க வேணும் டாக்டர். அது ஒன்றுதான் என்னுடைய ஆசை. எந்தக் காரியத்தை அவர் எந்தப்படி செய் தாலும் நான் ஒன்றும் பேசமாட்டேன். எனக்குப் புத்திவந்துவிட்டது. அவருடைய உடம்பு சரியானால் போதும் டாக்டர். சத்தியமாகச் சொல்கிறேன் டாக்டர்!''

இப்படிச் சொல்லிக்கொண்டே கல்யாணி அம்மாள் 'ஓ' என்று ஒரே கூக்குரலாகக் கதறி அழ ஆரம்பித்து விட்டாள். உண்மை யில் அவளுடைய மனத்தின் பரிசுத்தமான அன்பும், நமது நாட்டுத் தமிழ் மக்களின் குடிப் பிறப்பு தர்மமும், கபடம் இல்லாத குணமும் சேர்ந்து அந்த சோகத்திலே அப்படியே ஒலித்தன.

* * *

சந்திரிகாவும் சாவித்திரி அம்மாளும் அப்புலிங்கத்தின் பங்களாவிலேயே, அந்தப் பழைய வெளிவீட்டிலே தங்கி யிருப்ப தற்கு வேண்டிய ஏற்பாட் டைச்செய்துவிட்டு, கல்யாணி அம்மாளையும் கனகசுந்தரத்

தையும் சொக்கி குடிக்கு அனுப்பி வைத்தார் டாக்டர் சுரேஷ். இந்த ஏற்பாடு களில் அவர் தீவிரமாக ஈடுபட்டிருந்த போதுதான் பாலக்கரையில் சிலம்பப் போட்டிக்கான காரியங்கள் ஒரே மும்முர மாக நடந்து கொண்டிருந்தன!

நாகரத்தினத்தின் கட்சியில் குப்புசாமி யும், மஜீதின் கட்சியில் மஹ்பூல் என்ற ஒரு சண்டியனும் கோதாவில் இறங்குவது என்று தீர்மானம் ஆகியிருந்தது. உஸ்தாத் மீரான் பம்பாயிலிருந்து திரும்பி வந்தவர் ஜட்கா வண்டியில் வரும்போதே இந்த விவரங்களைத் தெரிந்து கொண்டு விட்டார். நிலைமை இத்தனை தீவிர கட்டத்தை அடைந்த பிறகு இனி இதைத் தடுத்து நிறுத்த வழியில்லை என்றும், எல்லாம் அல்லாஹ்வின் ஆணை என்றும் நினைத்தார்.

குப்புசாமி பகோரான் வீட்டுக்கு வந்து அவனுடைய ஒத்தாசையை நாடினான். ஆனால் 'யார் கட்சியிலும் சேருவ தில்லை' என்ற தன் தீர்மானத்தைச் சொல்லிக் குப்பு சாமியை அனுப்பி

பற்றி நாகரத்தினத்துக்குக் கவலையில்லை. ஏனென்றால், மஜீதின் கட்சியில் யாருக்கும் இந்த மாதிரி மை போடுகிற ஒரு காரியத் தைப் பற்றித் தெரியாது. தெரிந்தாலும் அவர்களுக்கு நம்பிக்கை இராது!

நாகரத்தினம் அங்கிருந்து சென்ற பிறகு, என்ன ஆச்சரியம், மஹ்பூல் வந்தான், பகோரான் வீட்டுக்கு! ஆனால் மை கேட்டு வரவில்லை அவன்! உஸ்தாத் மீரானின் சீடர்களில் முக்கியமானவன் என்று கருதிப் பகோரானைப் போட்டி பார்ப்பதற்காக அழைக்கவே வந்தான் மஹ்பூல். இந்த மரியாதை பகோரானுடைய மனத்தை நெகிழச் செய்து விட்டது!

'மஹ்பூல் இவ்வளவு நல்லவனாக இருக் கும்போது எதிரிக்கு மை கொடுத்து அனுப்பினேனே?' என்ற எண்ணம் பகோரானுடைய மனத்தை அறுத்தது.

'ஏதாவது சொல்லிப் பேசி நம்மை ஏமாற்றி விடுகிறானே இந்த நாகரத்தினம்!' என்று மனத்துக் குள் வருந்திக் கொண்டே பகோரான் சொன்னான்:

" தம்பி! இந்தா



தமிழ்ப் படத்தில் கீழ்க் குறிப்பிட்ட வேஷங்களில் நடிக்க, தகுதியுள்ள அமெச்சூர் நடிகர் தேவை. முந்திய சினிமா அனுபவம் அவசியம் இல்லை. கீழ்க்கண்ட விவரங்களோடு, மிகச் சமீபத்தில் எடுக்கப்பட்ட (Un-retouched) முழு உருவப் புகைப்படமும், 'குளோஸ்-அப்' புகைப்படமும் சேர்த்து விண்ணப்பிக்கவும். அனுப்பப்பட்ட புகைப் படங்களைத் திருப்பி அனுப்புவது சாத்தியமில்லை.

## 1. கதாநாயகன் (Hero)

(1) வயது (2) உயரம் (3) நிறம் (4) படிப்பு
(5) தாய் மொழி (6) நாடகமேடை அனுபவம்

## 2. கதாநாயகி (Heroine)

(1) வயது (2) உயரம் (3) எடை (4) நிறம்
(5) இடுப்பு அளவு (6) தாய் மொழி (7) படிப்பு
(8) நாடகமேடை அனுபவம் (9) நடனம் முதலியன தெரிந்திருந்தால் அவை பற்றிய முழு விவரம் :



புரடக்ஷன் மானேஜர்

**மாடர்ன் தியேட்டர்ஸ் லிமிடெட்**

எக்ஸ்டென்ஷன் - - - சேலம்-1

தீர்ப்புச் சொல்வதற்கான நீதிபதிகள் கோதாவுக்கு வெளியே கயிற்றைச் சுற்றி விளிம்பில் நாற்காலிகள் போட்டு உட்கார்ந்திருந்தார்கள். உஸ்தாத் மீரானும் அவர்கள் வரிசையில் கொஞ்சம் தள்ளி உட்கார்ந்திருந்தார். அவருக்கு அருகிலே இன்னும் கொஞ்சம் தள்ளி நாகரத்தினமும், மஜீதும் உட்கார்ந்திருந்தார்கள்!

இவன் மை தடவி யிருப்பது அவனுக்குத் தெரியாது. அவன் மை தடவியிருப்பது இவனுக்குத் தெரியாது! இரண்டு பேருமே மை தடவிய புருவத்தோடு 'சலாம் வரிசை' வாங்கினார்கள்! வேடிக்கை என்னவென்றால், தங்கள் தங்கள் கட்சித் தலைவர்களான மஜீதினிடமும் நாகரத்தினத்திடமும் சலாம் வாங்க வரும்போதே, இருவரும் தங்களையும் மீறி உஸ்தாதுக்கு முதலில் சலாம் செய்துவிட்டுத்தான், தங்கள் கட்சித் தலைவர்களிடம் சலாம் வாங்கினார்கள்! மீரானுடைய முன்னிலைக்கு அத்தனை சக்தி இருந்தது என்பதைக் கண்டு அங்கே கூடியிருந்த ஜனங்கள் எல்லாரும் அந்தச் சலாம் வரிசையின்போது பலமாகக் கை தட்டி மகிழ்ச்சியைத் தெரிவித்துக் கொண்டார்கள்.

போட்டி ஆரம்பம் ஆயிற்று. பாவலா, பம்மல், துள்ளல், பின்னலடி, டாங்வளைவு, எதிர்ப் பாய்ச்சல், வரால் வீச்சு, சுருளி வரிசை, புலிக் கோடு, பஞ்சாப் உருமல், பிஜ்லி யாட்டம் என்று இருவரும் மாறி மாறி ஆடிக்கொண்டேயிருந்தார்கள். இருவரும் களைப்பதாகக் காணோம். போட்டியின் நோக்கமோ, கம்பின் முனையில் பூசியிருக்கும் சாயத்தை எதிரியின் உடம்பிலே கொண்டு அழுத்திவிட வேண்டும் என்பதுதான். இவன் அவன் உடம்பைக் குறி பார்க்கிறான். அவன் இவன் உடம்பைக் குறி பார்க்கிறான். அதே சமயம் இருவருமே அடுத்தவன்



கம்பு தன்னுடைய உடம்பில் பட்டுவிடாதவாறு, தடுத்து விளையாடிக் கொண்டிருந்தார்கள்! பெரிய ரஸம் என்னவென்றால், இரண்டு பேருமே வேகமாகப் பாயும் போதெல்லாம் மனசுக்குள் 'ஜிங்கிட ஜிங்கிட ஜும்' என்று சொல்லிக் கொண்டார்கள். தங்களுக்குப் புரியாத, விவரம் தெரியாத, பாஷையற்ற பாஷையான, அர்த்தம் இல்லாத அந்த உச்சாடனத்தில் இருவருமே நம்பிக்கை வைத்து, அந்த நம்பிக்கையிலிருந்து பிறந்த வெறியில் தம்மை மறந்து விளையாடினார்கள்.

இருட்ட ஆரம்பித்து விட்டது. காஸ் விளக்குகளை ஏற்றி வைத்து விட்டார்கள். ஆனாலும் இருவரும் அயரவில்லை. ஜனங்களோ ஓரே உத்சாகமாகக் கைதட்டுவதும், ஆரவாரம் செய்வதுமாகச் சண்டியர்களின் அந்த உத்சாகத்தை மேலே மேலே அதிகப்படுத்திக்கொண்டேயிருந்தார்கள்.

நிலைமை முருக ஆரம்பித்தது. சாயம் பூசிய குச்சிமுனையை எதிரியின் மேலே பதிப்பது என்ற நோக்கம் மாற ஆரம்பித்தது. இருவருக்குமே ரோஷம் ஏற்படவே, எதிரியை விடத் தான் வல்லவன் என்பதை நிரூபித்து விட வேண்டும் என்ற ஆத்திரம் வெறியாகத் தலைவிரித்தாடியது. மனத்துக்குள்ளே விபரீதமான புதிய எண்ணங்கள் இருவரிடமுமே உண்டாயின.

நமது நாட்டுச் சண்டை முறையில் நன்றாகத் தேர்ந்த சண்டியர்கள், 'வர்மஸ்தானம்' என்று இந்த மனித உடற்கூற்றை ஆராய்ந்து கண்டு பிடித்திருக்கிறார்கள். இந்த மனித சரீரத்தில் சில நுட்பமான நரம்புப் பொட்டுக்கள் இருக்கின்றன. முக்கியமாக விலாவிலும், நெஞ்சுக்குப் பக்கத்திலும், நெற்றியிலுமாக ஏழெட்டு ஸ்தானங்கள் இருக்கின்றன என்று கண்டு பிடித்திருக்கிறார்கள். இந்த இடங்களில்லேசாக ஆள்காட்டி விரலைக் கொண்டு அப்படி ஒரு சுண்டுச் சுண்டினாலும் போதும். அப்படியே துடி துடித்துக் கொண்டு சுருண்டு விழுந்து விட வேண்டியதுதான்! எக்ஸ்ரே முதலிய சாதனங்கள் ஏதும்இன்றியே உடம்புக் குள்ளே ஊடுருவிஆராய்ந்து கண்டு பிடித்துள்ள இப்படிப்பட்ட 'வர்ம'ங்களை எத்தனையோ நூற்றாண்டுகளாக நமது தமிழ் நாட்டுக் குரு சிஷ்ய பரம்பரை பாதுகாத்து வருகிறது. இந்த இரகசியத்தைப் "போட்டாப் போட்டி"ப் பயில்வான்கள் இருவரும் இன்று கையாண்டு விடுவது என்று முடிவு கட்டி விட்டார்கள் மனத்துக்குள்ளே!

காஸ் லைட்டின் வெளிச்சத்தில் ஜோடிகள் பாய்ச்சும், துள்ளியும், பம்மியும், சாடியும்

ஒரு முறையிலே இரமப்படி ஆடிக் கொண்டிருந்தவர்கள் இப்பொழுது விபரீத நோக்கத்திலே கம்புகளைச் சுழற்றுகிறார்கள் என்பதை உஸ்தாத் மீரான் கவனித்தார். அவருக்கு ஆச்சரியம் தந்த இன்னொரு விஷயம், இருவருமே வாய்க்குள் எதையோ உச்சாடனம் செய்து கொண்டார்கள் என்பது!

விளையாட்டின் ஆரம்பத்தில் பிடித்திருந்த கம்புகள் போட்டி மும்முரத்தில் நொறுங்கி விட்டன. மறுகணம் புதுக் கம்புகள் கொடுக்கப்பட்டன. மறுகணம் ஆட்டமும் தொடர்ந்து நடக்க ஆரம்பித்தது. மீண்டும் அந்த ஆட்டத்திலே விபரீத எண்ணமும், விஷ நோக்கமும், விநோத உச்சாடனமும் தொடர்ந்தன!

"என் உயிர்! அல்லது உன் உயிர்!" என்று கதறினான் குப்புசாமி.

"உன் உயிர்! அல்லது என் உயிர்!" என்று பதிலுக்குக் கதறினான் மஹ்பூல்.

இருவருடைய முகங்களிலும் பேய்வெறி தாண்டவமாடியது. 'கம்பைச் சுழற்றி வர்மத்திலே ஒரு குத்துக் குத்திவிட வேண்டும்!' என்பதே இருவருடைய நோக்கமும்!

இதைப் புரிந்து கொண்ட உஸ்தாத் மீரான் நாகரத்தினத்தைப் பார்த்தார். அவளோ முகத்தைத் திருப்பிக் கொண்டாள். மஜீதைப் பார்த்தார். அவன் சோகமே உருவாக இவரைப் பார்த்தான்.

"ஜிங்கிட ஜிங்கிட ஜம்" என்று உரக்கச் சொல்லிக் கொண்டே கம்பை ஓங்கினான் குப்புசாமி. அடுத்த கணம் 'ஜிங்கிட ஜிங்கிட ஜம்' என்று இன்னும் உரக்கச் சொல்லிக் கொண்டே தன்னுடைய கைக் கம்பை ஓங்கினான் மஹ்பூல்! அங்கே கூடியிருந்த ஜனங்கள் இதைப் பார்த்ததும் வானம் அதிரும்படியாகக் கை தட்டினார்கள். கோதாவின் வளைவுக்கு அருகிலே இருந்த நாகரத்தினம் "பலே குப்புசாமி!" என்று பலமாகக் கூப்பாடு போட்டாள்.

இதே சமயத்தில் இந்தச் சிலம்பப் போட்டிகளிலே சற்றும் சம்பந்தப்படாதவராய் அப்புலிங்கத்தின் வீட்டுக்குள் டாக்டர் சுரேஷ் நுழைந்து கொண்டிருந்தார்.

அவர் யோசித்தார்:

'தண்ணீரின் சக்தி அற்புதமானது. இரண்டு குழாய்களுக்கு ஊடே துவாரம் பண்ணி அதற்குள் இன்னொரு இணைப்புக் குழாயை வைத்து இரண்டு குழாயையும் சேர்த்து விடுவோம். ஒரு குழாயில் தண்ணீர் விட்டால் இணைப்புக் குழாய் வழியாக அது அடுத்த குழாய்க்கும் போய்ச் சேரும். இரண்டு குழாயிலும் ஒரே அளவு ஆழந்தான் உண்டாகும். அதிகத் தண்ணீர் ஊற்றிய குழாய், அந்த அதிகப்படியான தண்ணீரில் பாதியை அடுத்த குழாய்க்குக் கொடுத்து விட்டு, தானும் அதைப் போல அதே அளவு தண்ணீரோடுதான் நிற்கும். இரண்டு மனித இதயங்களுக்குள் பாசம் என்ற இணைப்பு ஏற்பட்டு விட்டால், மனித மனமும் இதே போலத்தான் இயங்குகிறது. ஒருவருக்கு ஏற்படுகிற சுக துக்கம் அடுத்தவருக்கும் பங்கு போட்டுக் கொண்டு பாய்ந்து செல்கிறது. இந்த அதிசயத்தைப் பார்த்து என்னால் வியப்படையாமல் இருக்க முடிகிறதில்லை. என்றாலும், அதிசயப்பட்டுக் கொண்டே பேசாமல் இருப்பதில் அர்த்தமில்லை. ரவீந்திரனுடைய வாழ்க்கையின் சிக்கல்கள் இப்படியே பின்னிக் கொண்டு போனால் பெருந்தவறாக முடியும். இதற்கு ஒரு வழி காண வேண்டியது மிக மிக அவசியம். இல்லையென்றால் பூங்காக்களிலே உள்ள நீரூற்றுப்போல பல இதயங்களிலிருந்து ஏக காலத்தில் உணர்ச்சிகள் சீறி விழும். அதோடு சங்கரிகாவின் வரலாற்றையும் இப்பொழுதே தெளிவுபடுத்தி விட்டால் என்ன?'

இவ்வாறு எண்ணியவராக நெற்றியைப் பிசைந்து கொண்டார். ரவீந்திரனுடைய வாழ்க்கையின் எதிர்காலம், கல்யாணி அ...



# வருஷத்திற்கு வருஷம், முன்னைவிட, மேலும் மேலும், அதிகப் படியான மோட்டார்காருடையவர்கள்

# ஸ்டாண்டர்ட்

## பாட்டரிகளையே வாங்குகின்றனர்

### ஏன் என்றால் . . .

அவையாவும் கவினமுறையில், சிறந்த விஞ்ஞான நிபுணரின் கட்டுப்பாட்டில் ஒரு நல்ல பாட்டரிக்கு இன்றியமையாத நிலைக்குகந்தபடி எல்லா பாகங்களையும் கொண்டு அமைக்கப்படுகின்றன. நாங்கள் அமோகமான அளவு பாட்டரி தயாரிப்பு செய்வதால் எங்கள் அமைப்புகளை இன்றைய நிலைக்குகந்தபடி வைத்திருக்க இயலுகின்றது.

### சமீபகாலத்து—தொழில் நுணுக்கம்

உலகிலேயே சிறந்த அநுபவம் வாய்ந்த பாட்டரி தயாரிப்பாளர்களின் முன்னணியில் நிற்கும் ஸ்வீடன் தேசத்து டூடர்ஸ் அவர்களுடன் நாங்கள் 'டெக்னிகல்' தொடர்பு கொண்டிருப்பதால் அவர்களின் தொழில் நுணுக்கங்களையும், சொந்த 'பேடண்டு'களையும் நாங்கள் உபயோகிக்க முடிகிறது. நீங்கள் வாங்கும் எங்களின் ஒவ்வொரு பாட்டரியும் எங்களிருவர்களின் கூட்டு அநுபவத்தின் சின்னம் என்று கூறுவது மிகையல்ல. நியாயமான விலையில், நாடெங்கும் இவை விற்பனை, சர்வீஸ், செய்யப்படுகின்றன.

---

*பற்பலவிதமான கார்கள் மற்றும் டிரக்குகளில் முதல் ஆரம்பத்தில் அமைந்தவை பெரும்பாலும் ஸ்டாண்டர்ட் பாட்டரிகளே.*

---



ஸ்டாண்டர்ட் பாட்டரீஸ் லிமிடெட்

43, போர்பெஸ் ஸ்டிரீட், போர்ட், பம்பாய் 1

STD. 2322

இந்தியாவில் லெட்-ஆஸிட் பாட்டரிகள் தயாரிப்பவர்களில் மிகப் பெரிய சுதேசி கம்பெனி

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

# "எனக்கு பிரியமான நறுமணம்"

என்கிறார் சாவித்திரி

"லக்ஸ் டாய்லட் சோப்பின் புதிய வாசனை உண்மையாகவே விரும்பப்படுகிறது. அதன் நறுமணம் அதிக நேரம் தேகத்தில் கமழும்"



சுத்தமான, வெண்மையான லக்ஸ் டாய்லட் சோப்பின் சிறந்ததாக நறுமணமாக்கப் பட்டுள்ள நுரை உலகத்தில் மிகப் பிரபலமான அழகுடைய பெண்மணிகள் சருமத்தை புத்தம் புதிதாகவும், மிருதுவாகவும், வனப்புடனும் வைத்திருக்கிறது.

உங்கள் தினசரி எழிலளிக்கும் ஸ்நானத்திற்கு பெரிய சைஸ் சோப்பை உபயோகித்து மகிழுங்கள்




## லக்ஸ் டாய்லட் சோப்

சினிமா நட்சத்திரங்களின் அழகு தரும் சோப்

LTS. 461-50 TM